கழக வெளியீடு: ௩௩௪

# சங்கநூற் கட்டுரைகள்

அல்லது

# பழந்தமிழர் நாகரிகம்

[ இரண்டாம் புத்தகம் ]

---

மறைத்திரு. மறைமலையடிகள் மாணவரும்,
கழகத் தமிழ்ப் புலவருமான
தி. சு. பாலசுந்தரன்
(இளவழகனார்)
எழுதியவை

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட்,

திருநெல்வேலி, : : சென்னை.

# பதிப்புரை

'வையததுள் வாழ்வாங்கு வாழ்வது எவ்வாறு? அங்ஙனம நெறியறிநது வாழினும், அதன்கண் இழுக்க லுடையுழி அவ்வப்போதும் ஊற்றுக்கோ லொப்ப உதவும் ஒழுககமுடையார் வாய்ச்சொல எது? இவை முதலிற் றெரியவேணடும' என்பது, நல்வாழ்க்கை நிலையை விரும்பி அதன்கட் செலல முயல்குவா ரொவ்வொருவரும் நாடோறும விருமபிக்கேட்கும் இரங்கியவேண்டுகோளுரையாகும். இச் சிறுநூல அதற்கு ஒரு வகைச் செவவியில் விடைகாண முயன்றிருககின்றது.

உணவு, உடை, கல்வி, பழக்கம, வழக்கம, ஒழுக்கம், விழுபபம என்னும ஏழு தலைப்புக்களில மேற்குறித்த வினைப்பொருள் இதன்கண் ஆராயப்பட்டிருக்கின்றது. ஏழு தலைப்புககளும ஏழு கட்டுரைகளாகக் கட்டுரைத் திறத்தில எழுதப்பட்டிருககின்றன. எழுதியவர் கழகப் புலவர் இளவழகனார்.

பணடைக் காலத்தவா வாழ்வியல முறையை விளக்கு முகத்தால, இக்காலததவா மேற்கொள்ளுதற்குரிய நல் வாழக்கைப பேறறிற்கு இந்நூல நுண்ணிய மெய்மமுறை களை நெறி கோலிக் காட்டுகின்றது. இதனைக் கற்பார், மெய்வாழக்கையில முறைதெரிந்து நிற்க வழி காண்பர்; தெளிவெய்துவர்; கடைப்பிடியும பூண்பர் உண்ணவும் உடுக்கவும் கற்கவும் பழகவும வகைதெரிந்து, வழக்கந் தழீஇ ஒழுககம பூண்டு விழுப்பமெய்துதற்கு, மக்கள், தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
| --- | --- | --- |
| 30 | தோள்தொலிபு | தோடுஒலிபு |
| 37 | மலர் பூ | மலர்ப் பூ |
| ,, | வெறுங்குறும | வெங்குறும |
| 48 | வெண்ணில | வெண்ணில |
| 50 | துடுபபுறு | துருப்புறு |
| 64 | உரியதாய் | உரியவாய |
| 66 | யறுத்தற் | யுறுத்தற் |
| 73 | உதவும | உதவவும |
| 98 | கதிரருநதி | கதிரருந்து |
| 189 | செலவர்க் | செலவற |
| 191 | விளக்கின் | விறகின் |

---

# பொருளடக்கம்

பொருளடக்கம



---

# சங்கநூற் கட்டுரைகள்

## க. உணவு

### I

### உணவின் முதன்மை

செநதமிழ நாடடின் பல வகையான நலங்களில உணவு நலமும நாம அறிதற்கும் ஆராயதறகும மிகக இனபந் தருவதாய் அமைநதிருக்கினறது மககள் உயிா வாழகைக்கும மறறச சிறறுயிாகளின உயிாவாழக கைககும உணவுப் பொருளே உலகில் முதறகண் வேண்டியிருக்கினறது. (தமிழமொழியிற சஙக காலத் தில எழுநத நூலகள் உலகவியறகைகளை நனகு முடிவு கட்டிக கருததுககளை விளஙக எடுத்துரைககும இயல பமைநதவை) அவறறுள், கற்கக் கறக நாலூறும புற நானூறு என்னும நூல,

“ உண்டி முதற்றே உணவின் பிண்டம ”

எனறு ஒரு துணிபினை இறுத்துக் கூறுகின்றது. உலகில் உயிர்கள எடுத்திருககும் உடமபு, ‘ உணவின் பிண்ட’ மென்றே இதனகண் உரைககப்படுதலும், ஆதலால், ‘ அது உணவையே முதறகாரணமாக உடையது ’ என்

றுங கருதது எளிதிற் புலப்படும்படி 'உணடி முதற்றே' ்ன ஒரு தொடா அதனகண முதலில அமைநது நிற்ற பும உணவின முதனமையினை நமககு நன்கு புலபபடுத் நும.

உலகிற குழநதைகள் பிறநதவுடன அவை அறிநது கொள்ளும முதற பழககம பாலுணணுதலாயிருத்தல கொண்டும் இவ்வுணமை எளிதிற றெளிநதுகொளளப் படும். மேலுமு, ஈது உணவு ஈது அலலாதது என்று அறிந்துகொள்ள வியலாத பசசைப பருவததில் அம மதலைகள், தங் கையில் ஏதகபபடினும் அதனை உண வெனறே நினைத்து உடனே உணணும விழைவுடன தம வாயில வைததுககொளள விரைதலை நாம நாடோ றும இயற்கையிற் கண்டு வருகினறோம். பினனாச சில காலஞ் செனறு அவை மழலை மொழிநது சிறறிலிழைத துஞ் சிறுதேருருட்டியுஞ் சிறுவர் சிறுமியராகி உலவுங காலும, பழம் பால பண்ணிகாரம முதலிய ஊண் பொருளகளில் மிககவிழைவுடையராய் எனககு உனககு என முந்திப் போந்து பொருது பொருமுகினறனர். மறறு, இப் பிளளைமைப பருவங கடநது இளமைப் பருவமெய்திய பினனரோ, அறிவு வளர்ந்த தம அரு முயறசியால திரைகடலோடியும பெறு பொருள தேடி அதுகொணடு வகை வகையவான நறுவிய உணப் பொருளகள் தொகுததும அடிசிலமைததும குமரி வாழையின குருததது விரிததுத் தமர் பலருடன இருநது அறுசுவையுணாநது உணடாட்டயர்தலில மக்கள், ஆர் வம பெருகிநிறறலை அறியாதாா யாா? இனிப, பெறற

கரியதான அவ் விளமைப் பருவம மாறி நரை முதிர் கிழப்பருவம எயதிக், காமம் முதலிய இளமை விழைவு கள் அடஙகியவிடததும், மாந்தா தம ஊண் சுவை யுணாவை விட்டவரலலா. உடலைவிட்டு உயிாபிரிநது போதும் இறுதி நேரததிலும அவர்கள உணவிற் பால விடும் வழககம இனறும இருநதுவருகினறது. இறந்த பின்னரும பிணடமிடுதல யாவருமறிநத மர பன்றே ! மககள யாககை இஙஙனமெலலாம உண வின பிணடமாயிருந்துவரும உணமையைப பழநதமிழ் மககளாகிய நம முனனோா நனகறிநத நிலையினரென பது, அவா நமககு வழஙகியிருககுந தேனருவியனன தீநதமிழப் பழமபாடலகள பலவறறாலும நாம இனி துணரலாம.

“ ஈன்ற குழவி முகஙகண் டிரஙகித
தீமபால சுரபபோள ”

எனனுஞ் சாத்தனர் நறறமிழும,

“ குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந தொட்டுங கவ்வியுந துழநதும
நெய்யுடை யடிசில மெய்பட விதிரத்தும
மயககுறு மககள் ”

எனனும பாண்டியன் அறிவுடைநம்பியின் பைநதமிழும,

“ உழா அது வித்திய பரூஉக்குரற் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதி துணமார்
மரையான் கறநத நுரைகொள் தீமபால்......
சாந்த விறகின் உவித்த புன்கம்

கூதளங் கவினிய குளவி முன்றிற்
செழுங்கோள் வாழை யகலிலைப் பகுக்கும
ஊராக் குதிரைக் கிழவ ”

என்னுங் கருவூர்க் கந்தப் பிள்ளை சாத்தனாரது கவின்றமிழும்,

“ முளிதயிர் பிசைந்த காந்தண் மெலவிரல
கழுவுறு கலிங்கம கழாஅது உடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே ”

எனனுங் கூடலூர் கிழாரது கொழுந்தமிழும்,

“ தன்னமர் காதலி புன்மேல வைதத
இன்சிறு பிண்டம யாங்குண டனனகொல ”

எனனும வெள்ளெருக்கிலையார்தந தெளளுரைத தமிழும் இஙகு நினைவுகூர்நது இனபுறறபாலன. இவை, மக்கள தங குழவிப பருவ முதல மூப்புப் பருவ முடிய எல லாக் காலஙகளிலும, தாம *படிவநோன்பியராயினும் முறறுந துறந்தோராயினும் உணவிற கருத்துடைய ராயிருநது தம உடமபோமபும இயல்பும, அவரன்றியும விலங்கின ஞெகுதி முதல மனனுயிரடஙகலும அவ்வுண வில வேடகை மிகவுடையவாய் முதலில அது தீர்த்துக கொளளும முனைந்த நிலையுந தெளிய விளககி, உயிர்க ளெடுதத உடம்பு உணவின பிணடமாதலையும அதனைச்

* மணிமேகலை, உஅ : உஉஉ-அ.

சஙக காலப பழையோா நனகுணர்நது தக ஒழுகின மேனமையையும இனிது புலப்படுத்துதல் காண்க.

உடமபில உயிா நிலைபெறுதலும, பின் நிலைபெற்ற நலலுயிா தனனுட கரநது கிடககும அறிவு உணர்வு முதலிய அரிய உள்ளியலபுகளைக கிளரச்செய்து விளக் கஙகொளளலும, கொணடு படிபபடியாக முதலவன் றிருவருள நிலைகளிற றேறி அவன் அருடபெருககிற றேக்குறலும, உறறுத் தானபெறற இனபம இவ் வைய கமும பெறுகவெனக கனிநது மனனுயிர்கட்கு யாண டுந தொணடாறறுதலுமான பிறவியின விழுபபயனக ளெலலாம இஙஙனம் உணவினையே முதலைதுவாகக கொணடு நிகழலின, உலகிற றலைசிறந்த அறமாவது உண்டி கொடுததலே என முனனோர் துணிந்திருந்தனர். **திருக்குறளுரையிற்** பரிமேலழகா "உணவின் பிணடம உணடி முதற்றாகலின் ஈதல் சிறநத" தென றுரைத்து ஈதலறம் இன்னதனமேற றெனபதை இனிது விளக்கி னர். சஙக காலததில, "உணடி கொடுததோா உயிா கொடுததோரே" எனத **தொகைநூலுள்ளுங் காப்பிய நூலுள்ளும்** ஒரு தொடா வழககமாகப பயினறு வருதல இம முடிபினைப் பினனும வலியுறுததாநிறகும.

உணவுப் பொருளகளைத தந தாளாண்மையால் செய்களில் விளைத்துத தம்மிடம் ஏராளமாய் வைத் திருபபோரான வேளாளரே பிறர்ககு மனமகிழ்வோடு இனனுரை கூறி அவறறைத தாராளமாய் வழங அறஞ்செயல கூடுமாகலின, அறம் 'வேளாண்மை' யெ

னுஞ் செழுஞ சொலலால வழஙகி வருதலும இஙகு நினைவுகூாநது மகிழதலவேண்டும.

"............ .. ... ..... .விருந்தோம்பி
**வேளாண்மை செய்தற் பொருட்டு**"

எனத தெயவத திருவளளுவா இச சொறபொருள விழுபபத்தினை எததுணை அழகாக இனிதியைததுத் தெளிவிக்கினறனா! நகரம எனபதும நாகரிகமெனப தும உணுபபொருள்கள நிரமப விளையும மருத நிலத தின் கண்ணவாய்ப பண்டுதொட்டே வழஙகி வருத லும ஈணடுக கருதறபாலது. உடமபில உயிா நிலை கொளளுமாறு புரககபபடுதல இவ்வாறு உணடி கொடுத்தலாலாகலின், "பெருஞசோறு பயநது பல யாணடு புரநத" வெனப **புறநானூற்றின்**கணணும ஒரு தொடா வரும. இதனாலனறே, மணிமேகலை யெனனும அணிதிந்தமிழ, உணவை 'உயிா மருநது' எனவும, அதனை உயிர்கட்கு அருளோடு வழஙகி அறம்புரிநத போ அறச செலவியாகிய மணிமேகலையை 'உயிா முதலவி' யெனவும் மகிழநதழைபபதாயிறறு!

இனி, நிழலினருமை வெயிலிற றெரிதலைப்போல உணவின முதனமையானது அது கிடைககாவிடததுப பசியால வருநதுதல கொணடும இனிது அறியபபடும. உலகிற, பசியாற றுயருழககு நிலையே எவராலுங காணபபொருதது! மினனிய மேனியராயச செலவச் செழுமையோடு விளஙகிய மககள, பின மிடிப்பட்ட காலததில அம் மேனியழகு சிதைநது தசையுலாநது

வறறிய யாககையராய வறுமைக கொடுமையோடு தள்ளாடித தளளாடி நடககுநிலை, ஒனறறகொனறு எத துணை வேறுபட்டதாய எததுணை இரக்கவுணாவினை வருவிபபதாய இருககின்றது! செல்வ நிலையாமையை உணர்ததுதறகெழுநத **நாலடியார்,** தனது முதறசெய்யுளிலேயே மிடிமைக் கடையாளமாகப் பசியான மெலிதலை முன நிறுததி "அறுசுவை யுணடி அமர்நதில்லாள் ஊட்ட மறுசிகை நீககி யுண்டாரும வறிஞராய்ச சென்றிரபபா ஓரிடததிற கூழ்" எனறுரைதது இரங்குமாயின, பசியின கொடுமைககு முன நிறபது உலகில வேறியாதிருககினறது?

தொடாநது வநத உயாகுலப் பெருமையை அழித்துத, தன ஆணமையினுல முயன்று நிலைநிறுததிய மேனமைச சிறபபினையுங கெடுதது, அலலல் என்னும பெருஙகடலினின்று கடத்தறகு உறுதுணையாகப பறறிய அரும புணையாகிய அழியாக கல்விப் பிடியினையும நெகிழ்த்து, இததுணையும ஒழிந்து நன்னிலை நீஙகினுந தீநெறிகளில் வீழாது நிறறற்கேனுந தடை செய்வதாயிருந்த நாண் எனனும இயறகை அணிகலனையும் போககி, இவ்வாறெலலாம உயிரியலபுகளை ஒடுககிப பிறவியைப பாழாககியதன்றியுங கடைபபடியாக உடம்பின செழுமையாகிய அழகினையுஞ் சிதைதது வேருககி, இவ்வளவு செய்ததும போதாதாயப பிறன கடைவாயிலிற சென்று இளிவந்த இரவினைச செய்து உயிாபிழைககுமாறு இருததி மானங கொனறு நடைப்பிண மாககிவிட்டதாயின், இப பசிட

பிணிதான் எவ்வளவு பொல்லாததாய் இருக்கின்றது! இதனாலன்றோ, தண்டமிழாசானாகிய கடைச்சங்க காலச் **சாத்தனார்** தாம் மிகச் செழுமையான கூலவாணிகரா யிருந்தும் பிறர் இன்னல் கண்டு பொறாராய் வெதும்பிப், "பசிப்பிணி என்னும் பாவி" என்று இதனை மனநொந்து ஏசினர்!

வறுமை ஒருவற்குச் செய்யுங் கடைசியான கொடுமையாவது, அவனைப் பசிப்பிணியனாக்கிப் பிறன் கடைவாயிற் சென்று இரந்துழலுமாறு நிலையழித்துவிடுதலே யாகும். இவ்வாறு வயிறுகாய் பெரும் பசியால் அவ்வயிற்றை நிரப்பும்பொருட்டு இரந்துசெல்லும் இன்னல் நிலையே 'நிரப்பு' என்னும் வேறொரு பெயராலுஞ் சுட்டப்படும். இந் நிரப்பிடும்பையுடையார் பிறன்கடை சென்று கிடத்தலன்றி வேறு நிலைகளைக் காணாதவராவர். ஆதலின், வறுமை யென்பது பிறன்கடை செல்லலென்றும், செல்வம் என்பது அக் கடைவாயிற் செல்லாமை யென்றும் பண்டைத் தமிழ்ப் பெரியோர் கருதினர்.

"பிறன்கடைச் செலாஅச் செல்வம்"

என்னும் **அகநானூற்றின்** அருந்தொடரால் இவ்வுண்மை விளக்கமாகும்.

ஒரு காலத்திற் செல்வம் உடையார் பின் வறுமைப்படுவராயின் அவரது இன்னா நிலைமையே இத்தகையதாயின், பிறக்கும்போதே வறியராய்ப் பிறந்து தம் வாணாள் முழுமையும் அந்நிலையிலேயே கிடந்துழன்று

என்றும் வயிறு காய்ந்து மாய்வாரது பெருந்துயர் நிலை எத்தகையதாயிருக்கும்! அடுப்புச் சமைத்தலை மறந்து பல நாட்களாய்க் காளான் பூத்துக் கிடக்க, நெடுநாட் டொடர்ந்த பெரும் பட்டினியால் உடம்பு தோலுந் துரும்புமாகிப், பால் இல்லாமல் துளைதூர்ந்து வெறுந் தோலாகிய தாயின் முலை சுவைக்குந்தோறும் பசியால் அழுதழுது ஓயுங் குழந்தையின் துயரநிலை கண்டு, கண் கலங்கி நாளுங் காலங்கழித்த ஒரு குடும்பத்தவரின் மிகக் கொடிய வறுமை நிலை பழந்தமிழ் நூலாகிய **புறநானூற்றின்**கண் நுவலப்பட்டிருக்கின்றது. அதனை நினைக்குந் தோறும் மண்ணும் உருகும், மரமுருகும்! பசியினால் இங்ஙனம் உடம்பு பழுதாகி உயிரின் அறிவுமுயற்சிகள் அவிந்து பிறவி பாழாய்ப் போதலின், அத்தகைய கேட்டினையும் நீக்கிப் பிறவியை நலமுடையதாக்க வல்ல உணவு, இவ்வுலகத்திலுள்ள உயிர்கட்கு எவ்வளவு முதன்மையாய் இருக்கின்றது நோக்குமின்!

உணவிருந்தால் உடம்பில் உயிர் நிலைபெறுதலும் அஃதில்லாக்கால் உடம்பினின்று உயிர் பிரிந்து போதலும் இயற்கையாய் நிகழ்தலாலன்றோ, தமது தகுதிக்கு ஒரு குறைவு நேர்ந்தவிடத்தும், தம் நண்பர்க்கு ஓர் ஊறு நேர்ந்தவிடத்தும், பிறர் துயர் கண்டு உள்ளம் பொறுத்த விடத்தும், தாம் மீளமாட்டாத தனிமையிற் சிக்குண்ட விடத்தும், இவையொத்த பிற இடுக்கண்களிலும் உலகில் உயிர் வாழ்தலை விரும்பாதவர், உணவு நோன்பிற் றுறந்து பலநாட் பட்டினி கிடந்து உயிர்துறத்தலும் இயல்பாயிற்று. பட்டினியால் இங்ஙனம் உடம்பை வாடச்

செயது உயிாதுறநது போதலைப பணடைத் தமிழர் 'வடககிருத்த 'லெனவும, 'உயிாபதிப் பெயாத்த' லென வுங் கூறுவா. பணடு **கோப்பெருஞ் சோழன்** என்னும மனனன தன் மக்களால தனக்குக் குறைவு நோந்த விடதது அக் குறைவு பொருது, "இமயததுக கோடியாக தனன தம இசை நட்டுத தீதில் யாககையொடு மாய்தல தவததலையே" யெனக கூறி வடககிருநததும், அவர்க்கு ஆருயிர் நணபாகளான **பிசிராந்தையாரும் பொத்தியாரு** மென்போர் அந் நணபன் ஊறுகணடு தாமும அவனு டன் வடக்கிருந்ததும, பினனாக் கோவலன கணணகி வரலாறறில் அவ்விருவருமுறற கொடுநதுயா கேட்டு, அவருடன வழித்துணையாக மதுரைமாநகாகாறும வநத **கவுந்தி** யெனனுந் தவமூதாட்டி உயிருருகி உணணு நோன்பிருந்து உயிாபதிப பெயாததும, இனி அக கோவலன மகளான மணிமேகலையின அருநிகழசசியிற றொடர்புறற **ஆபுத்திர**னெனனும ஓா ஈரநெஞசினன கடல நடுவிற றனிமையில மணிபலலவ மெனனுந தீவிற சிககுணடு பனனுள் உணணு நோனபினனுய் உயிர்பதிப் பெயாததும இங்கு நினைவுகூர றபாலன. உடமபில உயிா நிலைபெறுதறகு உணவு இனறியமை யாததெனபது இதனுலெலலாம நனகு விளஙகுகினற தனறே? இதனுறறுன, இவ் வுணவையடுதது வாழக கைக்கு முறையே கட்டாயமாய வேணடபபடுங கலவி யைக் 'கலையமுது' எனவும, கேளவியைச 'செவி யுணவு' எனவும், அருளநிலையை 'அருளமிழ்தம' என வும எலலாவறறையும ஆனறோா உணவுபபொருளாக

உருவகபபடுதது முதனமை புலபபடுப்பாராயின ரெனக.

மேலும, பணடைககால நலலிசையுரையாசிரியன் மாா தாமியறறி வழஙகிய தொலகாபபிய இலககண நூலுரைகளிற பொதுவாக ஒரு வினைககு எடுததுக் காடடு நுவன்று செலலுஙகால, 'உணடனம' 'உண் டாம்' 'உணடெனம' 'உணடேம' 'உண்கின்றும' 'உணகினறிலேம' 'உணணுநினறனேம' 'உணணு நினறிலேம' என எததனையோ வகையான வினைச சொறகளை இஙஙனம உணணுந்தொழில கொணடே பெருமபாலும உரைததுச செலவர். **ஆசிரியர் தொல்காப்பி யனும்** இம் முதனமை கருதியே ஒவவொரு நிலததிற கும உரிய கருபபொருள்களிவையென முறை நிறுததிக் காட்டுகின்றவர், உணவினைத, தெய்வததிறகடுதத நிலை யில, மா, மரம, புள, பறையென ஏனைப போறறபபடு பொருள்கட்கெலாம முன நிறுத்தித,

"தெய்வம உணவே மாமரம புட்பறை
செயதி யாழின் பகுதியொடு தொகைஇ
அவவகை பிறவுங் கருவென மொழிப"

என்றொரு நூறபாவாற றமது பொருளதிகாரப பகுதி யிற கூறினர். ஊனுடமபெடுதத உயிாகட்கேயன்றி ஏனை யெலலாவுயிாகட்கும எலலா வுலகஙகட்கும தெயவம பொதுவாதல பறறி அதனை முதலிற கூறிப, பின இம மணணுலகவுயிர்கட்கு ஏனை எபபொருள்களி னும உணவு முதறகண வேண்டபபடுதலுன்னி அதனை அடுததோதினா ஆசிரியர் எனறறிதலவேணடும.

உணவின இம முதன்மை கடைப்பிடிததே ஆசிரியர் திருவள்ளுவனாரும் கடவுள் வாழ்ததொடு ' நீததார பெருமை ' யும 'அறனவலி யுறுதத' லும அறிவுறுக்கக கருதியவா, இடையிற கருதறபாலதொனறு உணடென நினைந்து, கடவுள வாழததுக்கு அடுததபடி உணவுககு முதன்மை கொடுத்து வான்சிறப்பினை ஏனையவற்றின முன் நிறுததி மெய்பபொருள் அருளுவாராயினா. வான என்னும் மழையைத திருவளளுவர் ' அமிழத ' மெனறே கருதினரெனபது, அதனை அவா,

" அமிழ்தம என் றுணரற் பாற்று "

என முதற்குறளிலேயே தெருட்டியருளுதலால ஐயுறவினறித துணிந்துகொளளபபடும. அலலாமலும, அத்தெயவ ஆசிரியா அவ் வதிகாரததின் ஏழாங் குறள் வரையில், ஓரறிவுயிாகள் நீாவாழுயிாகள பிற சிறறுயிாகள் மககள என எலலாவுயிாகடகும் மழை தானே உணவாகியும பிற உணவுபபொருளகளை உவாககியும பசித்துன்பத்தால அவை இறந்துபடாமற காததது, ஏனை நலஙகளையும உணடாககி, உலகததை இடையறுமல் நடைபெறச செயதலே விளககி, மறறக குறளகளில மககள செயதறகுரிய அறம, தவம, வழிபாடு முதலிய உணர்வொழுககஙகளும இவ் வான அமிழதம உணடானபின அது செயயும ஊடடததினுல நிகழறபாலனவென முடிவுரைதது, வான்சிறப பெனனு முகத்தால உணவின சிறபபினைத தெற்றெனப புலபபடுததினுர். மழைததொழில எனபது இஙஙனம உணவின றொழிலாய் முடிதல,

"வசித்தொழி லுதவ மாநிலங் கொழுபபப
பசிபபுயி ரறியாப் பான்மைத தாதலின"

எனச் சாத்தனார் முதலிய சானறோா பிறரும யாணடும் உரைத்துச் செலலுதலாற றெளியபபடும.

உணவின முதனமை இஙஙனமெலலாம் இனிது பெறபபடுதலாலனறே, உலகில திருமண முதலிய நிகழச்சிகளிலும முதறகண உணவின நலம பெரிதுங கருததூனறப்படுகினறது! திருமணச சடஙகு பறறி நுவலும ஓர் அகநானூற்று விழுசசெயயுள,

"உழுந்துதலைப பெய்த கொழுஙகளி மிதவை
பெருஞ்சோற றமலை நிறப நிரைகாற
றண்பெரும பநதாத் தருமணன ஞெமிரி
மனைவிளக குறுதது மாலை தொடரி"

எனக் கொழுமையான உணவினினறு தொடஙகி அதனை உரைததுச செலலுதல இஙகு நினைவுகூர்ந்து இனபுறுதறகுரியது.

# II

## உணவின் செழுமை

நாம் வாழுஞ் செந்தமிழ் நாடு பண்டைக் காலந் தொட்டே உணவுப் பொருள்களின் இயற்கைக் களஞ்சியமாய் எழில்பெருகி விளங்கி வந்திருக்கின்றது. இந் நிலவுலகத்தின் நடுப்பகுதியில் ஓடும் அழற்கோட்டிற்குச் சற்று மேற்றள்ளி நமது தமிழ்நாடு அமைந்திருத்தலால், இதன்கண் வெப்பமுந் தட்பமும் ஒத்த நிலையிற் பொருந்தி, ஓரறிவு உயிர்களான புற்பூண்டு செடி கொடிகள் முதல் எல்லா உயிர்களும் இனிது உயிர்வாழ்வதற் கேற்ற இயற்கை யமைப்புக்கள் பலவும் நன்கு வாய்ந் திருக்கின்றன. வாயவே, இந் நிலத்து மக்கள் அளவான தட்ப வெப்பமும், சமமான இரவு பகலும், மிதமான காற்று மழையும், இனமான ஓசை ஒளியும் எளிதிலடைந்து, அதனால் வளமான பயிர் பச்சைகள் விளைக்கும் பெருவாய்ப்பினையும் பெற்றிருக்கின்றனர். இவ் வரும் பெரும் வாய்ப்பு, உலகத்திற் பிறநாட்டவர்க் குப் பெரும்பாலும் இல்லையென்றே கூறலாம். இந் நாட்டின் குணக்குங் குடக்குந் தெற்கும் உவர்க்கடல் சூழ்ந்திருக்கின்றது. இக் கடற்பகுதிகள் ஒத்த தட்ப வெப்ப நிலை அமைந்து அளவான கடற்காற்று வழங்கி வருதலால், அம்முகமாக மக்களும் மற்றைச் சிற்றுயிர் களும் செடி கொடி மரங்களும் அவ்வப்போதும் ஏற்ற உப்புணா உட்கொண்டு தம் உயிரும் உடம்புந் தழைக் கப் பெறுகின்றமை இங்கே ஒரு தனிச் சிறப்புடைய தாய்க் காணப்படுகின்றது.

மேலும, நந தமிழ நாட்டை யடுத்து அதன் மூனறு பககஙகளிலும வளைந்துளள இந்துமாககடல், உப்பு மிககதாயிருககினறது. நிலபபரபபு வேறுவே றிடங களில வேறுவேறு பொருட்கருவுஞ சுவையுமுடைத் தாதலொப்ப, இந நீரப் பரவையும ஆணடாண்டு வேறு வேறியலபுடையதாகும. கிழககில வஙகாளக குடாக்கட லும மேறகில் அரபிக் கடலு மெனனுங கூறுகளோடு தெறகில மிகப பரவலாய விரிநது கிடககும இநதுமாக் கடல உபபுச் சுவை மிகுநதிருததறகு ஏது, அதன் பெரும பகுதி ஊழியூழியாய முனபு நிலபபரபபாயிருநத தும, இப்போதும அஃது ஏனை ஆழாழிகளினும ஆழங குறைநது மேனீராய்க காணபபடுவதுமாகும. இந்து மாககடலின ஆழம் பெருமபாலும் இரண்டலலது இரணடேகால கலலேயாக, ஏனை 'அடலாணடிக'மாக கடலும 'பசுபிக' மாககடலும முறையே இதனின இருமடங்கு மும்மடஙகு ஆழமுடையவென இஞ ஞான்றைக் கடலாழங காணும ஆராயச்சியாளரும் அறிநது கூறுப. தெறகே குமரியாறிருநத பலலாயிர வாணடுகட்கு முனபே பாடபபடடதான,

" வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும,  
தெனஅது உருகெழு குமரியின் தெற்கும,  
குணஅது கரைபொரு தொடுகடற் குணககும,  
குடாஅது தொன்றுமுதிர் பெளவத்தின் குடக்கும "

என்னும மிகப பழைய தமிழச் செய்யுளிலும், குணக் கின்கண் உளள வஙகாளக குடாக்கடல் 'தொடுகட'

லெனக் குறிக்கப்படுதலின, அதந்துணைப் பழங்காலத்தி லும் இக கடலின ஆழமினமை அறியப்பட்டிருததல தெளியப்படும.

பணடைக்காலந தொட்டே இஙஙனம் இநதுமாக கடல மேனீராய உவாபபுச சுவை மிகக உபபாழியாய் இருந்துவரலால், இதன்கண அவ்வவ்வூழிகளினும விளஙகிப் பின அமிழ்நதுபோன பொழிலநாடுகளும் பயிர்நாடுகளும கானநாடுகளும மலைநாடுகளும் பெரு வள மிக்குத திகழ்நதிருநதன. பண்டிருந்த தென் குமரி நாட்டின் பிரிவுகளான ஏழதெங்க நாடு, ஏழ் மதுரை நாடு, ஏழ் குறுமபனை நாடு, ஏழ் குன்ற நாடு முதலிய பல வளநாடுகளின பெயர்களைக் கேட்ட லளவானும் இவ்வுணமை விளஙகவலலதாகும. இஞ ஞான்றுங், கடறகாற்று மிகக இலஙகைப பகுதிகளும இத தெனனாட்டின மேல கிழக கரையோரஙகளும இயல்பாகவே கொழுமை மேவி எஙகணுஞ சோலை களும பைஙகூழ்களுந நிரம்பிச செழித்திருததல் கண கூடாகக காணப்படும.

எலலா உயிர்களின உயிாவாழகககைககும இனறி யமையாது வேண்டபபட்ட உணக கூறுகளில உப் புணவானது, செநநீர் வளர்சசிககும எலும்பு வலிமைக கும மிக முதனமையுடையதாயிருககின்றது. ஏனை உணக கூறுகளான முதலுண கொழுப்புண இனிப்புண் நீருண வெனபன நரம்புந தசையுங கொழுப்பும் உமிழ் நீா முதலியனவும பெருககி வளாகக, உப்புணவோ இவ்வெலலா வளர்ச்சிககும முதறகாரணமா யிருக்குஞ

செந்நீரையும் எலும்பையுமே செழுமைசெய்து வலு வூட்டிவருகின்றது. 'பருத்தல்' என்னும் பொருளில் வரும் 'உப்புதல்' என்னுஞ் சொல் இதன் செழுமைப் பயனை நமக்கு நினைவூட்டும். 'உப்புமா' வென்னும் வலிமைதரும் பண்ணிகார வகையொன்றும் இங்கே நினைவுகூரற்பாலது. சுவையுள்ளும் இதனையொரு முதன்மைச் சுவையாக நம்மனோர் கருதிவந்தனரென்பது, சுவைபார்த்தல் என்னும் பொருளில் உப்புப் பார்த்தல் என்னுந் தொடரை வழங்கிவருதல் கொண்டுந் தெளியலாம். மேலும், விரும்பத்தக்க இனிமையியல்புகட்கெல்லாம் பண்டைக்கால முன்னோர் உப்பென்னும் மொழியை மிக அழகாக வழங்கிவந்திருக்கின்றனர். "கூடலிற் றோன்றிய உப்பு" எனத் திரு**வள்ளுவரிலும்** "உயங்காக்கால் உப்பின்றாங் காமம்" என **நாலடியாரிலும்**, "அமைத்தோளாய் நின் மெய் வாழ் உப்பு" என **அகநானூற்றிலும்** வராநின்ற வழக்குகள் அறிந்து இன்புறற்பாலன.

இம் முதன்மை கருதியே நந் நாட்டவர், உணவிடுதலை 'உப்பிடுத'லென்றே வழங்குகின்றனர். "உப்பிட்டவரை உள்ளளவு நினை" யென்னும் முதுமொழியே இதற்கு உறுபெருஞ் சான்றாம். உணவென்று கருதியவுடன் நமக்கு உடனே நெல்லும் அதன் அரிசியாலான சோறும் நினைவுக்கு வரலாம். அங்ஙனம் வராநின்றது, அஃது உணவின் முதற்பகுதியாய் உடம்பின் பொது வளர்ச்சிக்குரிய பெரும்பாகமாய் இருத்தல்பற்றியேயாம். "பழம்பல் உணவின் குமரி மூத்த கூடு" எனவும்,

"உணவு இல் வறுங் கூடு" எனவுங் கடியலூர் உருத்திரங் கண்ணனார் தம் **பெரும்பாணாற்றுப் படையினும்** **பட்டினப்பாலையினும்** நெல் என்னும் பொருளை 'உணவு' என்னும் பெயரினாலேயே இனிது வழங்கியிருக்கின்றனர். இங்ஙனம் உணவுக்கு நெல் எத்தனை முதன்மையதோ, அத்தனை முதன்மை அதனோடு கலந்துண்டற்குரிய அறுசுவைப் பொருள்கட்கும் உண்டு. ஆயினும், அவ் வறுசுவைப் பொருள்களிலும் உவர்ப்புச் சுவையுள்ள உப்பொன்றுவே முதற்கண் உணவுக்கு இன்றியமையாததாய் வேண்டப்படுதலின், நெல்லோடொப்ப உப்பும் உணவென்றே வழங்கப்படலாயிற்று. வழக்கிலும் இவ்விரு பொருள்களின் விலை அளவுமுறையிற் பெரும்பாலும் ஒத்திருக்கின்றது. கொடுப்பதூஉங் கொள்வதூஉங் குறைபடாதும் மிகைகொள்ளாதும், பண்டங்கள் கொண்டும் விலை மாற்றிக் கொண்ட பழைய காலத்தில், இந் நெல்லும் உப்பும் ஓரளவாகவே மாறுதல் செய்துகொள்ளப்பட்டன. ஓர் உமண் மாது, தனது கழிக்கரை நிலத்திலிருந்து உள்நாடு போந்து ஊர்த் தெருக்களில் உப்பு விற்பவள்,

"நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்"

என ஓர் **அகநானூற்றுச்** செய்யுள் இதனை எடுத்திசைத்தல் இங்கு நினைவிற் பதிக்கற்பாலது.

இனி, இஞ்ஞான்றை உணவுநூற் புலவர், வழக்கத்திலுள்ள பலவகை உணவுப் பொருள்களையும் நன்

காராய்ந்து கண்டு அவற்றில ஊட்டந்தரும் ***உய்வு**
**கள்** இன்னின்ன பொருளில இன்னின்ன வகையா
உள்ளனவென விளக்கமாக எடுத்துககாட்டுகின்றன
உய்வுறையில அவாகள ஐவகைப பிரிவுகள் கணடிரு
கின்றனர். அவ் ஐவகை உயவுறைகளும முறை
ஆற்றல, வீறு, வளட, தெளிவு, இனிமை முதலிய
தந்து நம்மவா உயிர்வாழககையை நலனும பய
முடையதாககி விளககஞ் செயவிககின்றன. சிறந
ஆவினபாலில இவ வுய்வுறைகளும இவற்றின பய
மெலலாம பெரும்பாலும நனகமைநதிருககின்ற
ஆனல, தெளிவு பயபபதான நான்காம வகை உயவு
அதனகண மிகுதியாக இல்லை யெனப. அவ வுய்வு
வெயிலவன ஒளியில நிறைநதிருக்கின்றது. பால கற
குங கறவையானிரைகள, வெளியில வெயிலிற சென்
மேய்ந்து அவ் வெயில படிநத இனிய அருவி நீரையு
மாநதி வருமாயின், அதன் மடியிலிருந்து ஒழுகுந
பால ஓரளவேனும் நான்காமவகை உய்வுறை வாய்கக
பெற்றிருககும. நெயதனில மக்கள ஆண்டுளள உ
பஙகழியில் உவர்நீர் தேக்கி முற்றும வெயிலவனொளி
லேயே அதனைக காயசசெயது விளைதடுக்கும உப்பா
விளையுளாகிய வெணகலுபபிலோ அவ வெயில உ
வுறை நிறையபபொருநதுதலின, அவ வுப்புண நமக்கு
தெளிவினை ஊட்டும் ஓா அருமபெருங் கரையமாயிரு
கின்றது. மிகக களைததும விடாய்த்தும வழிநடந்
வரும ஏழைமககள், வெயிலுக்காகத் தாம வநது ஒது

* Vitamins.

கும் இல்லததில் ஆஙகுறையும அறிஙனைவு மிகக தாய
மாரை அழைத்துத், 'தாயே, ஏதாவது பழைய நீரில
இவ்வளவு உப்புப்போட்டுக் கொடுங்கள' எனக் கேட்
டுப பெறறு அதனை ஆர்வததோடு வேண்டுமளவு பருகி
விடாயுங களையுந் தீாநது, அந நீரின புளிசசுவை
யானும உப்பின உவர்ச்சுவையானும இனிமையுந்
தெளிவுங் கைவரலுறறு இனபுறுதலை யாணடுங காண
கின்றனமலலமோ !

மேலும், உப்புவெனபது நாம இப்போது வழக்கததிற பெறுகினற உப்பளத்து விளையுளாகிய இவ் வுப்புமட்டு மனறு ; பல பிரிவுகளிற கூறப்படும எரிகநதகச் சுணணம முதலிய சுணணவகைகளுங கலனுப்பு வகைகளுமெல்லாம இதனகண அடங்கும. மரஞ் செடிகொடிகளிலும, மண புனல் முதலிய முதற பொருள்களிலும, இயறகையே விளையுங கறிகாயகள தானியங்கள் பண்டங்களிலுமெல்லாம இவ்வுபபுப் பொருள்கள் மிகுந்துங குறைநதும உறைந்து, அவ்வவ வளவிறகேறப உபபுசசுவை வெளிப்பட்டும படாதும நின்று அஃதொருவகை உயவுறையாய் நமககுப பயன படா நிறகினறன. இஙஙனமே நந தமிழ முனனோ மிகப் பழைய நாளிலிருநதே தமதுணவிற கைப்புச சுவையொனறுங கலநது, மறறொருவகை உயவுறையுங கண்டறிநது பயனகொண்டு வருகினறனா. அவ்வுய் வுறை உடமபுக்கு மென்மை பயப்பதாகும.

உணவிற '**சுவை**' எனபது இங்ஙனம் ஊட்டந்தரும்
**உய்வுறைப் பகுதிகளின் இயற்கை யடையாள**மாதலைத

தமிழ மககள தம உய்ததுணாவாற கூாநதறிந்து தெளிநது, தாம் உண ணும உணவுகளில் அறுவகைச் சுவைகளுங கலகக உண்டு வநதனர் ; வருகின்றனர். அச சுவைகளுள், துவர்பபுச சுவைமிகக பணடஙகள் ஆறறலும, கார்ப்புச் சுவை மிககன வீறும, இனிப்புச சுவை வளமும, உவர்பபுத தெளிவும, கைபபு மெனமை யும, புளிப்பு இனிமையும பயநது நமதுடம்பை நலமும அழகுமுடையதாக்கி உயவிக்கின்றன.

இவறறுள, ஒரு சுவை மிகுநது காணபபடும உணுப் பொருளில ஏனைச் சுவைகட்குரிய பகுதிகள அடியோ டிலலையாய ஒழிநதனவெனக கொளளலாகாது. மண புனல அனல காறறு வான என்னும ஐம்முதறபொருள் கள ஐவேறு வகையாய்ப் பிரிவுணடு நாங காணத் தோன்றுமாயினும், அவறறுள ஒவவொனறிலும ஏனை யெல்லாப் பொருள்களின கூறுகளும ஒவவோரளவில் அமைநது கிடநது நம வாழ்ககைககு நலநதருதலொப்ப, இவ் வறுசுவைப பொருளகளிலும, ஒவ்வொரு சுவைக் குரிய பொருளில ஏனைச் சுவைக கூறுகளும் அளவாய்க் கலந்துருவாகி நமமை இனிய நலவாழ்வில இருத்தி வரு கின்றன.

ஆதலால, இயலபாகவே இஙஙனம அறுசுவை யுய் வுறையும இழைநது கிடககும பச்சைக் காய்கறி கீரை கூலம பழம பால முதலியவறறை மக்கள பசசை யாகவே உண ணுதலும், அறுசுவையுங கலகக உண் ணு தலும் பெருநலம பயவாநிறகும். அவ்வாறனறி உண வுப பொருளகளைச் செயறகையாயச் சமைத்துண்ட

லால் அவற்றின் இயற்கைச் சுவை மாறி உய்வுறைகள் பழுதாய்விடுதலுடன், அவை இழைந்திருக்கவேண்டுங் கலவையளவும் பிழைபட்டுப் போகின்றது. இதனால், பலவகையான ஊறுகள் வாழ்க்கையிற் கிளைக்கின்றன. வாழ்நாள் குறைந்து உடம்பு வலிவற்று விடுகின்றது. செலவு மிகுதியாகி, முன்னமே வலுக்குறைந்துபோன உடம்பின் நிலைக்கு மேற்பட்ட பெருமுயற்சிகள் செய்ய நேர்ந்து, பின்னும் பெருங்கேடு உண்டாகின்றது. ஆயினும், இஞ்ஞான்றைப் பழக்கவழக்கங்கள் முற்றுஞ் சமைத்தலின்றியே உணவு கொள்ளற் கிடந்தரா வாகலின், ஓரளவேனும் பசும்பொருள்க ளுண்டுவரும் நற்பழக்கங் கொள்ளல், உயவுறை நலன்கள் விரும்புவா ரெவாக்கும் மிக இன்றியமையாததாகும். அன்றிச், சமைத்துண்ணும் உணவிலும் அறுசுவைப் பொருளுங் கலக்க அட்டுண்டல் மிக விரும்பத்தக்க தெனக.

பண்டைக்கால நன்மக்கள் இவ் வறுசுவை யுய்வுறை நலனை நன்கறிந்து, அந் நலன் பொதிந்த உணக்களை ஏற்ற நேரங்களிலெல்லாம் இனிது பயன்படுத்தி விளங்கினா. அறுசுவையோடு கூடிய உணவுதான் அவர்பால் மதிப்பு மிக்குத் திகழ்ந்தது. தகுதியான உணவென்று கூற விரும்பினால், அதனை 'அறுசுவை யுண' வென்றே அவா மொழிகுவர்.

> " அறுசுவை யுண்டி அமாந்தில்லாள் ஊட்ட
> மறுசிகை நீக்கியுண் டாரும் "

என வரூஉம் **நாலடியார்** முதற்செய்யுள் இங்கு நினைவு கூரற்குரியது.

"அறுசுவை நாலவகை யமிழதம பாத்திரத்தளிதது"

என வருஉம மணிமேகலை நூறபொருளும ஈங்கு உன்னி யறியற்பாலது. இவ்வாறு அவா இவ்வறுசுவையின் நலனை மதிததுரைததலால, வாளா காயபெரும பசியால் வயிறு நிரப்பி வெறறுயிர் வாழகக்கையில நடைபபிண மாக நீள உலவுதலே அவா கருததனறென்பதும், வெறும நரமபெலும்புகளுந தசை கொழுபபுகளுழ உரு வாகிய பெரியராய மககட் டோறறமளிதது மாளலே அவா நினைவனறெனபதும, மறறு, முதலுஞ கொழுப் புஞ முதலியவறறால ஆகும இவ் வுரு வளர்சசிகட்கு வேறாக அறுசுவைப் பொருட்கூறுகளால எழுச்சிகொள் ளும ஆறறல வீறு வளய தெளிவு முதலிய உய்வுறை நலன்களெலாம எழிலகனியத திகழநது அருஞ்செயல் பல ஆறறுவாராய் நிலவி வாழலே அவருளளமெனப தும இனிதுணரப்படும.

ஆனால, நந நாட்டு மக்களிற பெருமபாலார், மிகக் கொடிய மிடிமையாற் கால்வயிறு அரைவயிறுதானும் உணணமாட்டாது, அவ்வெறறுயிர வாழ்க்கையும வாழ வழியில்லராயக் குறறுயிருங குலையுயிருமாயக கிடத்த லும, அவரனறித், தம் பாழதத பசியவிககு நிலையினை மட்டும் ஓரளவு பெறறிருப்பாருளளும பலர் அறுசுவை யுணவுக்கு நாளுளும அலமந்து ஆறறல வீறு முதலிய உய்வுறை நலனகளின்றிப் பிறவி வறிதாதலும நினையுங கால், நெஞ்சந் துணுக்குறறு நீராயக கரைநதொழிகின றது. இரஙகத்தகக இக கொடிய மிடிநிலை அடியோடு

பொடிபட் டொழிதற்குத், தக்கோரனைவரும ஆவன செய்தல எத்துணை இனறியமையாதது !

நமது நாடென்னவோ, இயற்கையே வளம மிக உடையதாகததான் திகழ்கின்றது. மேலெடுத்து விளக கியவாறு ஊட்டவகையானும உய்வுறை வகையானுஞ் சுவை வகையானும மரஞ் செடி கொடி வளாசசிக்கும் மறறை உயிர் வளாச்சிக்கும முதனமையாக உளள உவ ரினை, இத தமிழ நிலம் முழுமையுஞ் சூழ்ந்து திகழும பேருவராழியான இநதுமாக கடல் அளவான வெப்ப தட்பததுடன் பல முகமாக வழங்கி வருதலால், நாடு இணையற்ற இயறகை வளம படைத்ததாகவே செழித் துக் கிடககின்றது. கடல வழஙகும் இவ் வளததின முதன்மை, பண்டைத் தமிழாசிரியர், தந தமிழரசரை "விழுநீர் வேலி நாடுகிழவோனே" என மகிழநதிசைக் குஞ் செஞ்சொற றொடரிற் கருககொணடு கிடததல நுனிததுணாந்து கணடுகொளளபபடும.

கடலோரததில தொடா தொடராக நீணடு நிவநது கிடக்கும மலைகளிலும் அவறறை ஆழநது நெளிந்து முடககும மலைக கணவாயகளிலும, மழைக காறறும் அலைக காறறும இடையறறும இடையுருதுங கடல் வீசி வருதலால், அங்கெலலாஞ் சிறியிலை வெதிரின் நெல லுந தினையும, தீஞ்சுளைப பலாவும வாழையும மாவும, கொழுங்கொடி வளளியும அவரையும் பிறவுஞ், செழுந் தெழுககும சாறும நீரும உழவா உழாஅத இயறகை யிளையுளாய்ச செழிதது, அதனால ஏனைச சிறறுயிர் ாழக்கைக்கும வளர்சசிககும், அமமுறையே முதன்

முதல மககட் டோறறததிறகும அவா கலையுணர்ச்சிக்கு மெல்லாம இடநதநது, நலனும நாகரிகமும் பயவா நின றன.

" கயததிட்ட வித்து வறத்திற சாவாது
கழைககருமபின் ஒலிக்குநது
கொண்டல கொண்டநீர் கோடை காயினும
கணணனன மலாபூக குந்து
கருஙகால வேஙகை மலரின் நாளும
பொன்னன்ன வீசுமநது
மணியன்னநீா கடற்படரும
செவவரைப் படப்பை நாஞ்சில "

என இத தமிழ்நிலததின் 'நாஞ்சில மலைப்' பாஙகர் புறநானூற்றிற் புகழபபடுதல இஙகு நினைவுகூரறபாலது.

இஙஙனங கடலளிதத அலையுபபும அதனை யேறறு மலை பயநத மணணுப்புங் கொண்டு பல பேராறுகள் கீழிறஙகி நாடெஙகணும பலமுகஙகளிற காலவிரிந்து பரவி நெலலும பொனனுங கொழிதது நாளும நம மக கட்கு வாழவளிதது வருகினறன.

" நெறபல பொலிக பொன்பெரிது சிறக்க "

என்னும ஐங்குறுநூற்றுத் தமிழ, இவ்வியறகை நிகழ்ச்சி யாலெழுநத அழகின கொழுந்தனறே ! மிகப் பழைய காலததில இநதுமாப்பரவையின் நடுவண வான்றோட்டு நிவநதிருநத மிகப்பெரிய குமரிககோடும, இனிய வெண் டொடலைகள போல அதன பல மருஙகுங கீழிறஙகிப் பாயநது பெருககெடுத்த பஃறுளி குமரிப் பேராறுகளும்

இஙஙனம நந நாட்டுக்கு விளேதத வளனும் நலனும் அளவுபடாதனவாகும. இஞ்ஞானறு உலகமெஙகும கிளேவாஙகி விரிநது மிக வளாநதனவெனனும நாகரிக வளன பலவும அஞ்ஞானறு இக குமரிககோடு அளிதத உபபின பயனே யெனபதில் எததுணேயோ உணமை கருவுறறிருககினறன. இந்து ஆழியின அலேககால செறிநத குமரிக கோட்டின இநநலம இஞ்ஞானறு உல கப பேரோஙகலாய் உயர்ந்து வயஙகாநின்ற இமயமலே யின இயறகைக்குங கிட்டிறறில்லே. கடலவாய ஒழிநத இப பெருங குமரிநாடு போக, எஞசிககிடக்கும நந தமிழ நிலததுக்கும இவ்வியறகை வளத்திற்குக குறைவில்லே. இஃதோா உணவுக கருவூலமாகவே எனறும் வயஙகா நிறகினறது. ஆயினும் நந் தமிழ மக்கள் இவ் விழுப பேறுகளே ஒரு சிறிதுங கருதாராய உழவோமபலும ஆவோம்பலும மறந்து முயறசியவிநது வறியராயின, நாட்டிற பசியும பிணியுந் தலேகாட்டாதொழியுமோ ?

மக்கள வாழககையானது இயறகை நலன உடைய தாயின, அவருணவுகள், பெருமபாலும உழவோமபல ஆவோமப லெனனும இவ் விரு பெருந தொழில வளாச் சிகளால இனிது கிடைத்துவிடும. பணடு தமிழ நிலத் தில விளஙகிய மககளுள் உழவரும ஆயரும என்னும இரு வகுபபினரே மிகுநதிருநதனர். ஏனேச சிறு சிறு தொழிலுடையோா பலரும, தத்தம பிரிவிற சிறுபான் மையராகவே யிருநதனர். உழவரால நாடெஙகும விளே யுள செழிதது வான்சோறு முதலியனவும, ஆயரால அதரெஙகும ஆனினங கலிததுத தீம்பால முதலியனவும்

ஏராளமாகக் கிடைத்துவந்தன. சோறு முதலியவற்றுடன் ஆவின்று கிடைக்கும் பால் முதலியனவும் உணவுக்கு இன்றியமையாதன வென்று அன்னோன்றைச் சிறுரும் விரும்பிவந்தமை,

"வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்
.. ........ ... ........... .. புதல்வர்"

எனவரும் புறநானூற்றடிகளால் நன்கு விளங்குகின்றது.

ஆவின் பயன்களாகிய பால் தயிர் மோர் வெண்ணெய் நெய் முதலிய உய்வுறைநிறைந்த உணுப்பொருள்களமேற் சங்கநூல்களில் அரிய அழகிய பலப்பல குறிப்புக்கள் நிரம்பிக் கிடக்கின்றன. ஓர் இல்லத்தில் அடுக்களையில் நெயயில் வேகும் வறையலையும் அதன் ஒலியையும் நினைந்து, நெய் பெய்து கொதிக்கும் பெரிய வாணலியை நீர் நிறைந்து பொங்குங் கயத்துக்கும், வாணலியின் நெய்யில் வறை பெய்ததும் அந் நெய்யும் வறையுந் துள்ளுதலைக் கயத்து நீரில் விழூஉம் மழைத்துளிகள் குமிழெழீஇத் துள்ளுதற்கும் ஒப்புமை செய்து,

"நெடுநீர் நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறை"

என நாலூற ஊற உரைக்குங் கோவூர்கிழாரது செய்யுள், சுவையுணர் வில்லாரக்கும் அது தந்து மிக்க இன்பம் பயப்பதாகும். நீரும் நாணுமாறு அன்னோன்று நெய் வழங்கப்பட்ட உண்மையை

"நீர்நாண நெய்வழங்கியும்"

என **ஆவூர் மூலங்கிழாரும்** இனிதிசைபபா. சில பொருள்களை வேகவைத்தறகு அடுககளையில இடப்படும உலைதானும நெயயுலையாய, அதன்கண அவை பெயயப்பட்ட வாயமையினையும "நெய்யுலை சொரிந்த"வென இவவாசிரியா பெருமானே வேறேரிடத்தும நவிலாநிறபர். மாந்தரேயனறி யானையுங குதிரையுங குரஙகு முதலியனவுமெலலாம நெயபெய்து மிதிதெடுத்த உணவை உணடு இனபுறும இயலபு **பெரும்பாணாற்றுப்படை, புறநானூறு, அகநானூறு** முதலிய பழைய நூலகளிலெல்லாம பயினறு வருகினறது. பால் அடடுப் பிறை சோததுக் கடைநதெடுத்துருக்கும நெய்யே இததுணைத் தாராளமாக வழஙகப்படுமாயின், ஏனைப பால தயிா மோர் வெணணெயகளின் பயில்வு எத்துணை வளமாயிருநதிருக்கும !

தமிழ் நாட்டவர் ஆவின பயன் கருதி ஆனிரைகளைக் கணணுங கருததுமாகப பணடு ஓமபி வநதனரெனபதும, ஆனிரைகள இநநாட்டின ஒவ்வொரு பகுதியிலுஞ சிறநதசெலவபபொருளாக மதிககபபட்டு வநதனவெனபதும, முனனெலலாம ஒரு தமிழரசா் மறறொரு தமிழரசருடன் பொருதல் செயய நோநத காலததில அவா நாட்டு ஆனிரைகளையே முதலிற கவாநதுகோடலும பினனரவறறை மீட்டுககோடலும வழககமாக நிகழநத மெயவரலாறறினினறுந தெளளிதின உணரபபடும. மிகப பழைய தமிழிலககண நூலாகிய தொலகாப்பியததினகணணேயே இஃதொரு திணையிலககணமாக நுவலப்படுதலின, இதன பெருவழககமுந தொனமை

யுந தெறறெென விளஙகாநிறகும். **மருதனிளநாகனுரென்** னும ஆசிரியா, தமிழெலலேயின வழி நில மெங்குமு ஆனிரைகளின ஆரவாரம் மிகவுப் பயினற இயலபினே,

"ஆனினங கலித்த அதர்பல கடந்து"

எனனுஞ செவ்வுரையினுல இனிது புலபபடுபபர்.

இஙஙனம ஆனேமபலொப்ப **உழவோம்பலுந்** தமிழகத்தில முதற பெருந தொழிலாய நிகழ்நதுவந்த தெனபது, அனேவராலுந தெளிய அறியப்பட்ட மெயமமையாகும். ஒருகாற சேரமான சிககறபளளித் துஞ்சிய **செல்வக் கடுங்கோவாழியாதனே** ஒரு பெரியார், 'நின வாழநாட்கள் பலவாகுக' என வாழததக கருதி, அவன வஞசிநகரத்தின புறமதில பொருஉம ஆன பொருநையாற்றின நுண்மணலினும, அவ் யாறு பாயும பலஹூாக கழனிகள் முழுமையும விளேயுஞ் செநநெல மணியினும பலவாகுகவென வாழ்த்துகினறவர்,

"புலவிலே வஞ்சிப் புறமதி லலேக்குங்
கலலென் பொருநை மணலினும் ஆங்கட்
பலவூர் சுற்றிய கழனி
யெலலாம விளேயும **நெல்லினும் பலவே"**

என்று தாராளமாக அருளிச்செய்வர். விளேயுளின் மிகுதியும உழவோமபலின் சிறப்புந் துணிதறகு இவ் வழகு நிகழ்சசியொன்றேயும போதும்.

நன்செய விளேயுளேயனறிப் புன்செய் விளேயுளும் அஞ்ஞான்று செழுமையாக விளேக்கப்பட்டுவந்த வாய் மையும உழவுமுறையும், செறுத்த செய்யுட் செய்செந்

நாவின் வயங்குபுகழக கபிலர், பாரியின பறமபுநாடு நோககி அவன் இறந்தபின் இரங்கிக கூறுவார,

" வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவல
கார்பபெயல கலித்த பெருமபாட டீரத்துப
பூழி மயங்கப் பலவுழுது வித்திப்
பலலி யாடிய பலகிளைச செவ்விக்
களைகால கழாலின் தோள்தொலிபு நந்தி
மென்மயிற் புனிற்றுப பெடை கடுப்ப நீடிக்
கருந்தாள் போகி ஒருங்குபீள் விரிந்து
கீழும மேலும எஞ்சாமைப் பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவரகு அரியத்
தினைகொய்யக் கவவை கறுப்ப அவரைக்
கொழுங்கொடி விளாககாய் கோட்பத மாக

எனவும்,

" நிலமபுதைப் பழுனிய மட்டின தேறல
புலவேய் குரமபைக குடிதொறும பகாந்து
நறுநெய கடலை விசைப்பச் சோறட்டுப்
பெருநதோள் தாலம பூசல மேவர
வருந்தா யாணர்த்து "

எனவும் விளக்கமாக அருளிசசெயவாராயினா.

பணடைக காலத்தில 'வெள்ளைககுடி' எனனும ஓர் ஊரில விளங்கிய நாகனாரெனனும தமிழாசிரியா, தாம தமிழவலலுநராய அறிவாட்சி செலுத்தி மிளிர்நத தோடு நிலபுலம வாயநதவராய உழவாட்சியு நடத்தி வருங்கால, சில ஏதுககளாற சில ஆணடுகள நிலவரி செலுத்த இயலாமை நோநது அநநிலஙகள ஆட்சிக்

குழுவினரால் கவரப்படுதலும், அதற்கு உள்ள நொந்து அஞ்ஞான்று திகழ்ந்த தம் அரசனான **சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்**பால் நேரே சென்று, அவற்கு உழவின் மேன்மையும் உழுவோர் முதன்மையும் உருக்கமும் இரக்கமும் கிளர்ந்தெழச் செவியறிவுறீஇத் தாம் பட்ட செய்க்கடன் தீர்ந்து அச் செயல்களை அவன் அகநேய உணர்வுடன் என்றும் இறையிலியாக அருளப், பெற்றுத் திரும்பிய அருநிகழ்ச்சியானது, உழவினருமைக்கோர் நந்தா மணி விளக்கமாய்த் திகழா நிற்கின்றது. அப் புலவர், அரசற்கு எடுத்திசைத்த மெய்ப்பொருள் வருமாறு :

'பாண்டியர், சோழர், சேரர் என்னும் தண்டமிழ் வேந்தர் மூவருள்ளும் பெரும, அரசு எனப்படுவது நினதே ; ஏனென்றால், ஞாயிறு நான்கு பக்கலுந் தோன்றி எரிப்பினும், வெள்ளி தென்புலம் படர்ந்து நிலைபிறழினும் அழகிய குளிர்ந்த காவிரிப்புனல், அறு தொழுகிக் கால் பரவிப் பாய்தலின் நாடு எனப்படுவது நினதே ; ஆகலின், இவ்வியற்கையமைப்புஞ் சிறப்புங் கெழுமிய வேந்தே ! நீ அறிந்தொழுகுதற்குரிய என் தெரிவுமொழிகள் சிலவற்றை அன்புடன் செவிக் கொள்வையாக;'

'வளவ ! நின்கண் குடையும் படையும் உள்ளன ; இரண்டும் நின் நாட்டில் மழையும் உழவுஞ் செழித்தற்கே இருப்பன. எங்ஙனமெனின், நின்கண் குடை இருப்பது கதிரவன் வெயில் மறைத்தற்கன்று ; குடிகளின் குறை மறைத்து அவர்க்கு அருள்நிழல் வழங்கு

தற்கே உளது; ஆதலால், குடிகள் முறைவேண்டும் பொழுது அங்ஙனம் எளியராயிருந்து நிழல்செய்யும் அரசரே, தாம் உறை வேண்டும் பொழுது மழைபொழியப் பெறுவர்; இதனால் உழவு செழிக்கும்; உழுபடை ஊன்றி ஈன்ற விளையுளின் பயனே வேந்தரின் பொருபடை தரூஉங் கொற்றமும்; அக்கொற்றம் மேலுமேலும் மழையும் உழவும் செழித்தற்கு இடஞ்செய்யும்; இவ்வாற்றால், நினக்குடைப் படைகளும் மழை உழவுகளும் ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் நின்று விளங்குதலை நீ நின் கருத்திற் பதித்தருளல் வேண்டும்;

'ஒருகால் மழை பெய்யாதொழியினும், அதனால் விளையுள் குறையினும், விளையுள் குறைதலால் மக்கள் செய்கையில் இயல்பல்லாதன எழினும் இவ்வுலகமானது காவலரையே பழிக்கும். அதனை நீ நன்கறிந்தனையாயின், கோளுரை கூறுவார் புரைமொழி கொள்ளாது நின் நாட்டு வேளாண்குடிகளை அவர் குறை களைந்து புரந்தருளி, அதனால் நாட்டிற் செழுமையுண்டாக அச்செழுமை கொண்டு ஏனைக் குடிகளையும் புறந்தருகுவையாயின், இந்நலன் நினக்கு யாண்டும் வலிமையும் புகழும் விளைக்க, நின் அடங்காப் பகைவரெல்லாம் நின் அடி வணங்கப்பெறுவை' என்பது. இறுதியிற் கனிந்து நிற்கும் இம் முடிவுரைப் பகுதி,

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்;
அதுநற் கறிந்தனை யாயின், நீயும்

நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே ”

எனப் **புறநானூற்றி**னகண் அமைந்து உயிர்ப்புடன் ஓங்கி நிற்கின்றது.

இனி, இங்ஙனம் உழவோம்பலும் பண்டு இந் நாட்டில் வளங்கொண்டு திகழ்ந்ததுடன் ‘**தேனோம்ப**’ லென்னும் ஒரு துணைத்தொழிலும் மலிந்திருந்தமை அறிதல்வேண்டும். ஈண்டுத் தேனென்றது, மதுவகை யென்னும் பொருட்டு. சங்கநூல்களில் இப் பருகுணவு பெருவழக்குடையதாய், நாகரிக மிக்க நன்மக்கள் அறிஞர்கள் முதலியோரிடம் பயின்று வந்துள்ளது. இது மயக்கந் தரும் **கள்ளினத்தைச்** சேர்ந்ததன்று. மற்று, அதற்கு மாறாகத் தெளிவும் ஊக்கமுந் தரும் **இன்னீர் வகையைச்** சார்ந்தது. இவ் வேறுபாட்டினை,

“ மட்டு நீக்கி மது மகிழ்ந்து ”

என **ஆசிரியர் உருத்திரங் கண்ணனார்** தமது விழுமிய **பட்டினப்பாலைச்** செய்யுளில் தெளிவாக விளக்கியிருக்கின்றனர். மட்டென்னும் மொழி இங்கே கள்ளென்னும் பொருளில் வந்தது. இதன் உரையாசிரியரான **நச்சினார்க்கினியரும்** ‘மட்டு நீக்கி’ யென்னுந் தொடருக்குக் “கள்ளுண்டலைக் கைவிட்டு” என்று இதுவே உரை கூறினார். மதுவென்பது ஒருவகைத் **தேநீ**ராகும்.

இவ் வினிய பருகுநீர், மரஞ் செடி கொடிகளின் வேர் தண்டு முளை கிளை முதலிய பல பகுதிகள் கொண்டும், இலை, மலர் காய், கனி, தேன், வித்துக்கள் முதலிய பல பயன்கள் கொண்டும் பல வகையான செய்முறைகளாற் சாறிறக்கித் தேம் பிழிவு செய்து, அது கெடாமைப்பொருட்டு அடிபருத்து வாய்குறுகிய கண்ணாடிக் குப்பிகள், பொன் வெள்ளிக் கலன்கள் முதலியவற்றிற் பெய்து வைக்கப்படுதல் வழக்கமாயிருந்தது. இவ் வியல்பு,

" மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனை "

எனனுங் குறுந்தொகைச் செய்யுளில் ஒருவமை முகத்தான் இனிது விளக்கப்பட்டிருக்கின்றது. ஈண்டு மட்டம் என்பது ஒருவகை இன்னீரினை உணர்த்துமென்பது, அது பெய்திருக்குங் கலம் தெளிவுந் தீஞ்சுவையு மிக்க ஊற்று நீர் நிறைந்த சுனைக்கு உவமையாக வருதலினின்றுந் தெளிந்துகொள்ளப்படும்

இவ்வின்னீருந் தத்தஞ் செய்வகைகளாலுஞ் செய் பொருள்களாலும் பயன்களாலும், இஞ்ஞான்றும் பல வகைப் பழச்சாறுகளின் தேநீர், நன்னாரி முதலியவற்றின் வேர்நீர், வாதுமை முதலியவற்றின் வித்துநீர், தாமரை முதலியவற்றின் பூநீர், புதினா முதலியவற்றின் இலைநீர் ஒப்பப், பலவகைப்படும். சுவையும் பல திறப் பட்டு, மகிழ்வுடன் பருகுதற்கிசைந்த முறையில் அமைந் திருக்கும்.

ஆயினும, இக்காலத்தில் அயல்நாட்டினின்றும் போநது நந நாட்டிற பெருகப பயின்றுவருங காப்பி விததுநீர், தேயின இலைநீர் போல உடமபின நலத்துக்குப பழுது விளைக்காத வகையில, இவ்வினனீர வகைகள பணடைக காலததிற கருததாகச செய்தமைககப் பட்டு, நணபர, விருநது, கிளைஞர முதலிய வருவார் போவார்ககுந தக்கோர்ககுந தமர்க்கும, அவரவர இயல் பிறகுங கருததிறகும முயறசிககும இசைநத வகையில், நேரம இடம முதலியன கருதிப், பல்வேறு பருகுநீராய் ஒப்புரவுப பொருளாயத, தகக அளவில வழஙகி, அளவளாவிப பயனகொளளப்பட்டு வநதன.

"பாலிற பெயதவும் பாகிற் கொண்டவும
அளவுபு கலநது மெலலிது பருகி
விருந்துற் றுறறி இருந்தனெ மாக"

என்னும புறத்திணை நன்னுகனரது வாயமொழி இஙகு நினைகூர றபாலன.

இனிப், பருகுபொருளான இத தேநீர வகையில, மயககந் தருங கட் சாறுகள் வேண்டாப பொருளாய்க கருதப்பட்டமை போலவே, உண்ணும 'பொருளான உணவு வகையிலும் மற உணாவு தரும் ஊன் வகைகள் பொருநதாப் பொருளாகவே அஞ்ஞான்றுந் தெளியப் பட்டிருநதன வென்பதும் அறிதலவேணடும. உணவுப பொருளிலிருநது ஊனை வேறு பிரிதது,

"ஊனும் ஊணும"

எனப் **புறநானூற்றில்** உரைக்கப்படுதல் கொண்டும் இவ் வுண்மை உணரப்படும். ஆசிரியர் **இளங்கோவடிகள்** " ஊனூண் துறமின் " எனத் தெளிவாகவே தஞ் சிலப் பதிகாரச் செவ்வறிவு நூலில் ஆணையிட்டருளினார் !

ஆதலாற், பண்டைக் காலத்தில் நந் தமிழ் நாட்டில் இங்ஙனமெல்லாம் **உழவோம்பலும் ஆனோம்பலுந் தேனோம் பலும்** உணவுக்குரிய நன்முயற்சிகளாய்த் தழைத்து இந் நாட்டினை ஒரு பேர் உணவுக் களஞ்சியமாகத் துலங்கச் செய்தமை நன்கு விளங்காநிற்கும். நாட்டுக்கு இன்றி யமையாத இம் மூன்று தொழில் வளர்ச்சியிலும் முற்கால மன்னர்கள் மிக்க கருத்துடையராய் நின்று அவற்றை யாண்டும் பெருகச்செய்து வந்தமையே இச் செழுமைக்கு ஏதுவாகும். ஒருகாற் **சேரமான் பெருஞ்சேர லாதன்** என்னும் மன்னன், சோழன் கரிகாற் பெருவளத் தானோடு பொருது புறப்புண் ணுற்று அதற்கு நாணி வடக்கிருந்து உயிர் துறந்தபொழுது, அவனோடு பெரிது பழகி அவன் நலவியல்புகளை நன்கு தெரிந்திருந்த **கழாத் தலையார்** என்னும் உணர்வாற்றல் மிக்க பெரும்புலவர் அவன் பிரிவுக்கு ஆற்றாராய்த், தாம் மனங்கரைந்து பாடிய ஒரு கையறுநிலைச் செய்யுளில், அவ் வரசர்பிரான் மறைவினால் அந் நாடு இழந்துபோன நலங்கள் பலவும் நினைந்து சொல்லி இரங்கலுறுகின்றவர், இழந்த உண வின் வகைகளும் இவையெனப் புலப்படுப்பாராய்,

" இருங்கட் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பச்,
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப,
உழவ ரோதை மறப்ப "

என நவின்று, இவ் ஆன் பயனும் தீந்தேறலும் பைங் கூழ வளனுமே ஒருங்கு எடுத்திசைப்பா ராயினர். பண்டு உழவோமபலிற் சோழ நாடும, ஆனேமபலிற் பாண்டி நாடும் தேனேமபலிற சேர நாடும் இயலவளனுஞ் செயன முயற்சியும் மிகக்குச் சிறந்திருந்தன எனலாம.

நந் நாட்டில இங்ஙனம ஆனேமபல உழவோமபல முதலிய சிறந்த தொழிலகளையே இஞ்ஞான்றும் வள முறச் செய்து வருதற்கு அரசினருந தலைவர்களும் முயல்குவராஞல், இத தமிழகததின இயல்பான உண வுச் செழுமையை நனகு பயன்கொண்டவராவர. பண்டு பாரத காலததில இந் நாவலந தீவின வடபகுதியில நிகழ்ந்த குருக்கரப் போரில், போர்ப்படைஞரனைவர்க் கும் இத தென்னுடடுச் சேரமான உதியஞ் சேரலாத னன்றே, பெருஞ்சோறு வழங்குஞ் செழுமையுடையனு யிருந்தான! அஞ்ஞான்று நந தமிழ இல்லங்கள 'வரையாப் பெருஞ்சோற்று முரிவாய முற்றங்'களும், 'குய்குரல மலிந்த கொழுந்துவை அடிசில இரவலர்த் தடுத்த வாயில்களு' மன்றே பெற்றுத திகழ்ந்தன! இத தமிழ நிலததின ஓர ஊர முன்பு 'ஊணூர்' என்றே பெயர் கொண்டு புகழ் மணக்க விளங்கியது! வயலெல்லாம்,

"நெலலின் வேலி நீடிய கருமபின்
பாத்திப் பன்மலர் பூத்ததுமபின ;

புறவெல்லாம,

புலலருந்து பலலாயத்தான்
விலலிருந்த வெறுங்குறுமபின்று ;

கடலெல்லாம்,

காலந்தந்த கலனெண் ணுவோர்
கானற் புன்னைச் சினை*நிலைக்குந்து ;

கழியெல்லாம்,

சிறுவெள ளுப்பின் கொள்ளை சாற்றிப
பெருங்கல நனணுட் டுமனெறலிக்குந்து ;

இவ்வாறன்றுல, அக்கால மாந்தர், 'வெய்துணட வியர்பபல்லது செயதொழிலான வியாபபறியாது' விளங்கினர். 'அன்ன நனணுட்டுப பொருநம் யாமே... யாணடுநிற்க வெள்ளி' எனக கூத்தாதாமும வளன் றலைமயங்கிச செமமாந்து செழித்தனர். இச் செழுமை யெல்லாம இஞ்ஞான்று யாண்டுச சென்றெளித்தது!

இயற்கைச் சூழல எங்கும எதிர்ந்து கிடக்க, மக்கள முயற்றினமை இன்மை புகுத்தி விடுதல எத்தனை இரங்கற்பாலது! ஆதலின, அஞ்ஞான்று கோவூர் கிழார் தமமை மறந்து மகிழ்ந்திசைத்தபடி நந் தமிழகத்தைக,

"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியன்நகர்
அடுதீ யல்லது சுடுதீ யறியாது
இருமருந்து விளைக்கும நன்று"

டாகப பண்டுபோற் றிகழச செயதல அனைவர்க்கும உரிய முதறபெருங கடமையா மெனக.

---

நிலைக்குந்து - நிலைக்கும.

# III

## உண்ணும் முறைமை

இனிப, பணடைககாலத தமிழப்பெருங குடிகள், இயறகை வளஙகளாலுஞ செயறகைச செழுமைகளாலுந தாம அடையப்பெறற உணவுப பொருளகளை இனபம் பெருக உண்டு நாகரிக வாழக்கை செலுததிய நன்முறையுஞ சிறிது நினைநது மகிழவு கொளளல வேணடும. உணணும முறையில அவர்ககு முதன்மையானது, **பலரோடுண்ணல்** ; அடுததது **சுவையோடு**ண்டலாகும. இவ்விழுமிய தமிழ் நாகரிகம தமிழநூ லெனப்படும் எதனுளளுஞ சிறநது காணப்படும.

மககள வாழ்ககையானது, முதலில அனைவரோடும அளவளாவிக கொளளும நேய வாழக்கையிலிருந்தே நாகரிகமுடையதாயப் பொலிவடைநது வளாச்சியெயதுகினறது. தம்மையொதத ஆருயிாத் தொகைகள நாளும் உணவுக கலமராநிறகத, தாம மட்டும இரககஞ சிறிது மினறித தனிததிருநது உணடு வயிறு நிரபபுதல, அனபு அருள முதலிய உயிரியறகைகளைக கிளரசசெய்து கொள்ள விருமபும நாகரிக வாழககையினாக்கு எங்ஙனம் இசையும்? இமமை மறுமை யெனனும அனைவோர் இருமை வாழ்வுககும இஙஙனம பலரோடு ஒருங்கிருநது உணணுமுறையே சாலவும வேணடப்படும முதல நாகரிக வொழுகலாறுகலின், இத் தமிழ நிலததில், இந்திரர் அமிழதம இயைவதாயினும் இனிதெனத் தமியருணடலும இலராயினர்.

வாழ்க்கை யென்பது இல்வாழ்க்கையே யெனவும், அதன் இல்லறமென்பது பலரோடுண்டலே யெனவுந் தீர்மானமாக முடிவுகட்டி யுணர்ந்து நந் தமிழ் முன்னோர் 'உலகுபுகத் திறந்த வாயிலுடையராய்ப் பல ரோடுண்டல் மரீஇ'யினர். அதியமான் நெடுமானஞ்சி என்னும் வள்ளல், பெருஞ்சேரலிரும்பொறை யென்னுஞ் சேரமன்னனுற் போர்க்களத்தில் வேலதைத்து உயிர் தொலைவுண்டபொழுது அவனோடு உயிரும் உட லுமாயிருந்து பழகி மகிழ்ந்த **ஔவையார்**, அவன் பிரி வாற்ருது நெஞ்சங் கரைந்து இரங்கிச,

"சிறுசோற ருனும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் ருனும் நனிபல கலத்தன மன்னே...

எனவும்,

"அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவிற
சென்றுவீழ்ந் தன்று, அவன்
அருநிறத்து இயங்கிய வேலே"

எனவும் உரைக்கும் பரிவுரைகள் அவன் பலர்க்கும் உதவி யாயப் பலரோடுண்டு நாகரிக வாழ்க்கை நடத்திய அரு மையினை நனகு புலப்படுக்கின்றன. 'தான் உண்ணு நேரத்தில் உணவு சிற்றளவாயிருப்பினும் பேரளவா யிருப்பினும் மிகப் பல உண்கலங்கள் நிரலே இட்டு எக்காலும் அவன் பலரோடுண்பன்' எனவும், அதனை

‘அததகைய நனிநாகரிக மேலோனது அரியமாாபில ஊடு ருவிய வேலானது, அவன் மாாபளவில மட்டும் நில்லா மல், அவனைச் சூழ்ந்தியங்கிய இசைக்கலைஞாதம் உண் கலஙகளிற பட்டு அவறறைத் துளைசெய்து, இரபபோர் கைகளுளளும் ஊடுபோகி, அவறறு புரககபபடும எளிய சுறறஙகளின கணமணிகளைத துரீஇக் குருடாககிச், சிறநத புலவர்கள் நாவினகணணுஞ் செனறு வீழநது தைத்தது’ எனவும இச் செயயுட் பகுதிகளில நைநது நைநது மொழியப்படும அஞரியின ஒப்புரவியலபுகள், எததனை உருககம வாயநதிருககினறன!

இஙஙனமே பணணன எனனும மறறோர் ஒப்புர வாளன் இலலமும, பழுமரஙகளை நாடிச செனற புள் ளினஙகள் ஆரவாரஞ செயதலையொப்ப அவன அவிழக கொடையை விரும்பித திரணட ஏழையெளியவர்கள் பேரொலி செயயும ஊணொலியரவம எஞ்ஞானறும் உடையதாய விளஙகிய தெனறும, உணவிற கட்டித் தயிர் கலநது அவன உருட்டியுருட்டி வழஙகிய தயிாத் திரளையைக கையிலேநதிக கொணடு இளம பிளளை களும பெரியரும வரிசை வரிசையாச செலலும ஒழுஙகு, மழைக காலததில எணணிறநத எறும்புகள் தததம் முட்டையேநதி நிரை நிரையாகத திட்டையேறும இயல்பினை ஒததிருநத தெனறும, அவன ‘பசிபபிணி மருத்துவன’ எனறும், ‘அதனால அவன் போன்றோர் யான வாழவிருககும நாட்களுஞ் சோத்து நீடு வாழ்க’ எனறுங் கொடையிலும வளததிலும மிகச சிறந்த சோழ வளநாட்டுப பேரரசனை **குளமுற்றத்துத் துஞ்சிய**

கிள்ளிவளவனே அச் சிறுகுடி கிழான் பண்ணனை வியந் தும் மகிழ்ந்தும் வாழ்த்தினனாயின், அஞ்ஞான்றைத் தமிழ் நாட்டுச் சிறுகுடிமக்கட்கும் முடியுடை மன்னரும் வியக்குமாறு பலர்க்கும் உணவளித்துவாழும் அருள் வாழ்க்கையினராய் வாழ்ந்து விளங்கினமை தெற்றெனத் தெளியப்படுமன்றோ!

செல்வரென்னுஞ் சொல் இத்தகைய பெருவாழ் வுடையார்க்கே பொருந்துமென்பது மற்றோர் முடி புடைமன்னனான பாண்டியன் அறிவுடை நம்பி யென்பான், 'படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும் உடைப்பெருஞ் செல்வராயினும்" எனத் தெளித்துரைத் நலங்கொண்டு இனிது தேறப்படும். இவ் வினிய நல் வாழ்க்கையைப் பெருவாழ்வென்று மட்டும் நவில மன ின்றித், தூய பேரறச் சான்றோரான இளங்கோவடிகள்,

"விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கை"

என்று உள்ளங் குளிர உரை குளிர மகிழ்ந்திசைப்ப ரனின், இதன் விழுப்பம் எத்துணைச் சிறந்தது! இதனா ான்றோ,

"மண்மலி முற்றம் புக்க சான்றோர்
உண்ணா ராயினும் தன்னொடு சூளுற்று
உண்மென இரக்கும் பெருமபெயாச சாத்தன்"

பானுரும்,

"உள்ளது, தவச்சிறிதாயினும் மிகப்பல ரென்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண்முறை யூட்டும்
இற்பொலி மகடூஉ"

ஒத்தாருமாக, அருஞான்று ஆடவர் பெண்டிரென இருபாலாரும் நிலவினர்.

இனி, அவர்தம் அட்டிற்சாலையோவெனின், இடையறாது பெருஞ்சோறட்டு வட்டித்தலின் மிக்க கஞ்சி யொழுக்குடையதாய், இம்மையிற் புகழும் மறுமையிற் புண்ணியமும் பெருகுதற் கேதுவாய் விளங்கின. காவிரிப்பூம்பட்டினத்திற் பண்டு விளங்கிய அட்டில்களைப் பற்றிக், கடியலூர் உருத்திரங் கண்ணனார் இயற்றிய **பட்டினப்பாலை** என்னுஞ் செய்யுளில்,

> " புகழ்நிலைஇய மொழிவளர
> அறம்நிலைஇய அகன்அட்டில
> சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
> யாறுபோலப் பரந்தொழுகி
> ஏறுபொரச் சேறாகித்
> தேரோடத் துகள்கெழுமி
> நீறாடிய களிறுபோல
> வேறுபட்ட வினையோவத்து
> வெண்கோயில் மாசூட்டும் "

என மிக அழகிய குறிப்பொன்று நுவலப்படுகின்றது.

இங்ஙனம் 'அறங்கரியாக அருளசுரந் தூட்டுஞ்' சிறந்தோராய அவர் விளங்கினமையின், தம் இல்லநாடி வருவாரெவராயினும் அவரவர் தகுதிக்கும் பழக்கவழக்கங்கட்கும் ஏற்ற வகையினெல்லாம் உண்டிசெய்து படைப்பதும் அவர் கருத்தாயிருந்தது, அறவோர் துறவோர் அந்தணர் சான்றோர் அறிவர் முதலிய உணர்வாட்சியுடையோரும், வேடர் இடையர் வலைஞர் கூத்தர்

பாணர் முதலிய தொழிற காட்சி வாயநதோரும தத
தமககுத தக அனபுடன விருநதோம்பபபெறற நிகழசசி
கள் **சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை** முதலிய நூலகளிலெலலாம
பலவேறுணாவுகள் கிளாநதெழுமாறு நனகெடுதது
விளககபபடுகின்றன.

மேலும, இலலத்தில மகளிர்மட்டுந் தனித்திருப்ப
ராயினும, விருநதெனின யாதொரு வேறுபாடும முன
னிறறலில்லை. முனபின மாறுபாடும முனனிறறலிலலை.
பருவமஙகையராயினுந, திருமண நஙகையராயினும,
ஈனறணிய அரிவை தெரிவையராயினும விருநதென்
னும வகையிற் றடையாதும நிகழதலிலலை. திருமண
நிகழாப பருவநங்கை யொருததி, உணணுநேரததில
விடாய்ககு நீரெனறு வநத ஓா இளைஞறகு யாதொரு
வேறுபாடுங கருதாது அது தநதுபோநத அருநிகழசசி
யும, அந் நிகழசசிககு முதலில இடனளிததது மனறிப
பினனருங களஙகங காணுது அவவிருவாககும் உதவி
பாய நினற அவடன றுயின அருளுணாசசியும "சுடாத
தொடீஇ கேளாய" எனனும அழகு சானற **கலித்தொகைச்** செயயுளில இனிதெடுதது இசைககபபடுகினறது.
பலலாயிரக கணககான ஆணடுகட்கு முனபே இத தென
றமிழ நாட்டில விருநதினமுன எவவகை வேறுபாடும
மாறுபாடும யாககுமினமை, மிகப்பழைய தமிழமுதல
நூலான **தொல்காப்பியத்**தினகண,

"புகாஅக காலைப் புக்கெதிர்ப பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக கண்ணும"

தலைவிக்குக கிளவி நிகழுமெனவும்,

" விருந்துபுறந் தருதலும சுற்றம ஓமபலும
பிறவும அனன கிழவோள் மாணபுகள் "

எனவும வரூஉம் நிகழச்சியிலககணஙகளால் நனகு துணியபபடுகினறது. இதனால், விருநதெனனும் வகையில அககால நனமககட்கிருநத நனமதிப்புங கடைப்பிடியும இனிது விளஙகலின, 'பலரோடுணட' லென்னும உணவுமுறைமை அவர்பால விழுமிய கோட்பாடா யிருநது விளஙகி வழுவினறி நிகழநதுவநத தெனனும வாயமை மலையிலக்கேயா மெனக.

இனிச், 'சுவையோடுண்ட' லெனனும மறறொருண்ணு முறைமையும நமமுனனோர்தம நுண்ணறிவையும் நறபழகக நலவாழ்ககை நிலைகளையும நமககு விளங்க அறிவிக்க வல்லதாயத் துலஙகுகினறது. உணவெனபது பொதுவாகச சோறும் நீருமாகும. நிலததில் விளையும் நெல முதலிய பலவகை உணவுப பொருளுஞ் சோறெனபதிலும், மழை பெயது ஊறிய நீரின கூறுகளாய் நீர் நிலைகளிலும் மரஞ்செடிகொடிகளிலும ஆனினங்களிலுங கிடைக்கும் உணணீர் கனிச்சாறு பால் முதலிய பல்வேறு பருகுநீர் வகைகளும அடஙகும். அடங்கலின, இவ்விருவகைக கூறுபாடும நெல்லும நீருமென்றுதல, நிலமும நீருமெனறுதல சான்றோரான் உரைக்கப்படுதலும் இயல்பாயிறறு. இவ்வியலபு,

" நெல்லும நீரும் எல்லார்க்கும் எளிய "

"உணவெனப படுவது நிலத்தொடு நீரே
நீரும நிலனும் புணரியோ ரீணடு
உடமபும உயிரும படைத்திசி ேனோரே"

எனனும புறநானூற்றடிகளால உணாநது கொளளப படும உணவின இவ்விருவகைக கூறும பொருநதினோ உடமபும உயிரும் படைததவராவரென இவையிறறுற பெறபபடுதலின, இசசோறும நீரும 'மருநது' எனவும இரு மருநது' எனவும ஆனறோா வாய்மொழியிற யினறுவரலாயின

"இருமருந்து விளைக்கும நனனாட்டுப் பொருநன்"

எனனும புறச்செய்யுளின றொடருககு அதன உரை யாசிரியர் "சோறறையுந தணணீரையும விளைககும நலல நாட்டுக்கு வேநதன" என்றே உரை கூறினர். உணவையும நீரையும நந் தமிழ மேலோர் இஙஙனம மருந்தென மதிதத மனபபானமையால, அவரவறறைச சுவையோடு துய்ககும அருநலனும, அளவோடு உயககும பெருநலனுங கணடு, வகையாகப போறறிப பயனபடுத தும மதிததிறனுடையராயினர். பழநதமிழரின உணவு, மிகக சுவையும் பயனுமுடையதாயக் காணபபடுகின றது. சஙகநூல்களில அதனியலபுகள்பறறி வநதிருககுங குறிபபுக்களே நாவுக்கும நலந தட்டுவனவாயச சுவை ததிாநதிருககினறன. பானை யவிழுககு ஒரு பதமெனன வணடும ஒன்றிரண்டு காட்டலாம.

அரிசி அக்காலததிற சுவையும பயனுங கெடா வாறு குறறலரிசியாகவே பயனபடுததப்பட்டு வந்த தனபது அனைவரும அறிநததேயாம. இது,

"தொடிமாண உலக்கைப பருஉக்குற றரிசி"

எனனும பழநதமிழத தொடரினுலும் விளஙகும. இத ஞல, இககால உணவாராயசசிகாரா உரைக்கும இரண டாம வகை உயவுறையையும முற்காலததவா இழவாது விளங்கினரெனபது போதருதது. இனி, அவர் அவ்வரிசி யைச சிறிய மெலலிய முழு அரிசியாகக கொண்டு, பாலுலை நெயயுலைகளிற பெயது, மெதமெதன அவிழ நிலை யில மலரலாககி, வழுவழுதத வாழையிலையின நடுவில் முலலைமுகை சொரிநதாலொபப நலல மகளிா கருனை கள சூழ வடடிதது ஊட்ட, வகையாக உணடு வாழநத னர்.

இஙஙனமாயவிடததும, நெயயிலலாத உணவு உணவென மதிககப்படாது கழிநதது.

" நெய்யிலாப பாற்சோற்றின் நோ "

என இகழும் **நாலடியார்த்** திருமொழி யொனறேயும இதனை மெய்ப்பிக்கச் சாலும. அந நெய்தானும ஆவின் நெய்யாய, அனறுடம வெணணெயுருககிப பெய்யு நெய் யாய்த், தொலைவிற செலலும இரவலரையுந் தடுதது நிறுததும மிகு மணங கமழ் நெய்யாய விளங்கியது. அந் நறுநெயயின இனிய இயலபில நனகு தோயநது ஆசிரியர்கள் நுகாநது கூறும மெய்யுரைகள் சிலவற ருல, அதன் உயவுறை மாணபுஞ் செயமுறை யருமை யுஙகூட உய்த்துணரறகுரியனவா யிருககினறன.

பூதபபாண்டியன் தேவி **பெருங்கோப் பெண்டு** என னும மாதரார், நெய், தோயந்திருககும் நிலையில அது

வெள்ளரிககாயின வெள்ளிய நல் விதை போல வெள ளயிாப பாஙகாயக் காணப்படும எனவும, மறறு, வல விலலோரியை வாழ்த்திய **வன்பரணர்** என்னுஞ் செநநாப் போதரார், நெய், உருகியிருககுமநிலேயில், அது தேனின தேறலே யொதது மெலலிய செமபொன நிறம் விராஅய் மெருகுடையதாயிருககும எனவும முறையே

“ அணிலவரிக கொடுஙகாய வாள்போழ்ந திட்ட
காழ்போல நலவிளா நறுநெய் ”

“ ஆனுருக் கன்ன வேரி ”

என்று அந நறுநெய யொதத உய்வுரைகளால் விளக் கிச செலலுதல இஙகு நினைவுகூர்ந்து மகிழறபாலன. நெயயே யனறிப, பால தயிா முதலிய ஏனை நறபொருள கள பறறியும பணடைககால முனனோா அவறறை வெணணில வொதத வெணடயிா பாலெனப் பல உவமை முதலியவற்ருல, மகிழநதிசைபபர்.

இனி, அந் நலலோர் மரஞ்செடி கொடிகளிலிருந்து விளையுங காய கனி கிரை முதலிய உணுப் பணடங களையும அவ்வவற்றின இயலபும பயனும அறிநது சுவையாரப் பயனபடுத்திவநத மேனமையும அறியற பாலது. தேஙகாய், மாஙகாய, பலாபபழம, கரு வேப் பிலே, மிளகு முதலிய நந் தமிழ நாட்டுககே சிறநத கறி காய் வகைகளை நம்மவா பறபல வகையாகப் பதன செயது துயத்திருக்கினறனர். இளநீா மிகச சிறநத பரு குணவாய்ப் பயனபட்டு வந்தது.

"வீழில் தாழைக் குழவித் தீநீர்"

என்னும அழகிய தொடர் கொண்டு, இது துணியப்படும.

**பெரும்பாணாற்றுப்படை**யில் அந்தணர் இலலததில் அமைககும நலலுணவினைக கூறுமிடத்து, 'அவரிலலம, முகபபிற பந்தரும, ஆன சாணததான மெழுகிய இடஙகளும், ஆன் கனறு, கிளி முதலிய இனிய சிறறுயிாகளும் உடையதாய், நிழலுந் தூயமையும் மகிழச்சியும் தநது திகழுமெனவும; 'அவ்வில்லததி லுறையுங கறபுடை மகளிர், அனனம எனனும மேன்மையான புள்ளின பெயரால நுவலபபடும 'அனனம' எனனும உயாவகையான தூய வெளளிய நெல்லரிசிச் சாதஞ் சமைதது, அதறகுக கறியாகக, கொமமட்டி மாதுளங காய்களை நறுக்கி மிளகு பொடியுங கருவேபபிலையுங கலந்து சேதாவின வெணணெயில வதககி யெடுதத சூடான கருனையும, காண்டற்கே இனியவாமபடி நறிய சிறிய மாவடுககளைப பலவகையாகத துவைததுப் புளிஞ்சுவையாக முன்னரே பதன செயது வைததிருக்கும ஊறுகறியாகிய தொககும இட்டு, வருவாரை உண்பிபபர்' எனவுங, கருததறகினிய அரிய குறிபபொனறு,

"செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தாப்
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்றாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாளர் உறைபதிச் சேப்பின்

பெருநல் வானத்து வடவயின விளங்குஞ
சிறுமீன் புரையுங் கற்பின் நறுநுதல
வளைக்கை மகடூஉ வயினறிந் தட்ட
சுடாககடைப் பறவைப பெயாப்படு வத்தஞ்
சேதா நறுமோர் வெண்ணெயில மாதுளத்
துடுபபுறு பசுஙகாய்ப போழொடு கறிகலந்து
கஞசக நறுமுறி யளைஇப, பைநதுணர்
நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்தத
தகைமாண காடியின் வகைபடப பெறுகுவிர ''

எனக காணபபடுகினறது. இதனுள மாதுளம போழ களை மிளகு பொடியுங கருவேம்பின் இலையும் அளைஇ வெணணெயில் வதககி யெடுக்குஞ் சூடுபதமான கறி வகை கூறப்படுதல், தமிழச சமையலின் விழுபபமும அதன் அமிழதாநதன்மையும விளககி அனவோரானுங கருததிற் பெரிது பதிக்கறபாலதாயிருககினறது.

தமிழகததின் மலைபபககஙகளைப பறறி நுவலுமிடங களினெலலாம பழைய தமிழ் நூலகளிற பெரும்பாலும மிளகு கொடிகளைபபறறி இசைக்கபபடுதல காணலாம. 'கறிவளர் சிலமபு' எனவும, 'கறிவளா அடுககம' எனவும, 'கறிவளருஞ சாரல' எனவு மெலலாம மலைககே அடைமொழியாகவும அது கொள்ளப்படும. இனிக, கருமை யென்னும பொருளில வருங 'கறி' என்னுஞ சொல, நாவிறகுச சுவையுறுததி உறைததலை விளக்குமாகலின், அச சொல்லையே தனககுப் பெயராக வுடைய மிளகு காயின் விழுப்பமும, அதனால் அதுவே கறிக்கு முதனமையாதலுந தாமே பெறபபடுமனறோ !

இக் கறி மிளகு, பண்டு காவிரிப்பூம்பட்டினம் போன்ற நகரங்களின் தெருக்களில் மூட்டை மூட்டையாக வண்டிகளின் வந்து நெரிபட்டுக் கிடந்ததென்று, **பட்டினப் பாலை** நுவலுங்,

"காலின் வந்த கருங்கறி மூடையும"

என்னுந் தொடரைக் கருதின், தமிழ் நாட்டில் அது பெருவழக்குடையதாயப் பயன்பட்டுவந்த உண்மையும் இனிது விளங்காநிற்கும.

உடம்பை நோயற்ற நிலையில் வயங்கச் செய்யுங் 'கடுகம்' என்னும் அமிழ்தவகையில் இக் 'கறி மிள'கும் ஒன்றுதல் கருத்திற் பதிக்கற்பாற்று. 'திரிகடுகம்' என்னுங் கடுகப் பெயர் வாய்ந்த நூல் ஒன்று **பதினெண் கீழ்க்கணக்கு** நூல்களில் ஒன்றாய் நம்முன் விளங்குத லும் நினைவுகூரற்பாலது. இனி, இஞ்சியின் உலறலாகிய சுக்கென்பது இம் மிளகு கடுகத்தோடியைந்த மற்றொரு வகைக் கடுகமாகும். இப் பொருள்களெல்லாம் பண்டு நந் நாட்டுக் கற்றரைகளிற் குவிக்கப்பட்டிருந்த தனி வளன,

"இஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும
பல்வேறு தாரமொடு கலலகத் தீண்டி"

என **மதுரைக்காஞ்சியி**னகண் நனகு விளக்கப்படுகின் றது.

பண்டைக்காலத்தில் நந் தமிழ் முன்னோர் இங்ஙனம் மருத்துவப் பொருள்களாகப் பயன்படுத்திய காய் கனி கீரை முதலியன, எத்தனையோ பலவாம.

"அக்கனி யுண்டோர் ஆறீ ராண்டு
மக்கள் யாக்கையின் வருமபசி நீங்குவர்"

என்னும் **மணிமேகலையடிகள்** சில கனிவகைகளின பேராறறலை நமக்கு நினைவுகூர்விககினறன. இஙஙனமே,

"பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெலலித் தீஙகனி குறியாது
ஆதல நினனகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே"

எனனும **ஔவைப் பிராட்டியார்** வாய்மொழியினாலுஞ சில கனிவகைகளின அமிழதாம இயலபு புலனாகினறது. திருககுறளுரையிற **பரிமேலழகர்**, ஔவையார் பெறற இவ் விழுப்பேற்றினை நினைநது, "இனிய கனிகளென்றது, ஔவையுணட நெலலிககனிபோல அமிழ்தாவன வற்றை" என உரைததலால, இவ் வமிழதாம இயலபிற பல கனிவகைகளை முறகால மககள் தெரிநது பயன கொணடு விளஙகினரெனபது இனிது துணியபபடு மனறே!

இனி, 'அமிழதம' என ஈணடு நுவலப்பட்டது, 'நீடிய வாணாள் பயககும உணவுவகை' எனப பொருளாம. ஔவையாரும் மேற செய்யுளிற "சாதல நீங்க எமககீததனையே" என்று அதனியலபைப் புலபபடுததியிருக்கினறனர். 'மருந்து' என்னும இனிய சொல்லும 'உயிரை உடமபில் நீடினிது பொருநதச் செயவது' என்னுஞ் சிறநத செமபொருள பயததலின, மருநதை அமிழதமெனறும இரணடையும், ஆறறல்

பயக்கும் நறிய உணவென்றும் வழங்குதல் இயல் பாயிற்று.

உண்மையான ஆராயுங்கால், மருந்தென்பது, சாறும் பயனும் மிக்க உணுப்பொருள்களின் கருக்களே யாய், ஊறுகறி தொக்கு முதலிய பதனுணவுகள் போன்ற ஒருவகை உணவுப் பொருளே யல்லது வேறில்லை. அதனை அங்ஙனஞ் செயற்கையாற் செய்து கூட்டுதலினும், இயற்கையாய் அவ்வப்போதும் முற்குறித்த கனிவகைகள் காய்வகைகள் கீரைவகைகள் முதலிய உணவுகள் வாயிலாகவே சுவையும் இன்பமும் மீதூர உண்டு மகிழ்ந்து, அமிழ்தாம் இயல்பும் அதுமுக மாக அழியா வாழ்வும் ஒருங்குபெற்று மாட்சிமையடை தலே மிகவும் விரும்பத்தக்கது. பண்டைக்காலத்தில் இங்ஙனமே உணவு முறையைப் பயன்படுத்தி ஆற்ற லும் அழகும் வாய்ந்தவராய மக்கள் நிலவினரென்பது, மருந்தென்பதை அமிழ்தமென்னும் பெயரால் அவர் வழங்கிவந்ததினின்றே நனகு உணரப்படுகின்றது.

மேலும், வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் ஆழ்ந்தாராய்ந்து பயன் மிக்க கண்ட மெய்யுணர்வின ரான, திருக்குறள் என்னுந் தெய்வப் பெருமாமறை நூலை அருளிச் செய்த திருவள்ளுவர், தம் அருள்நூலில் ‘மருந்’ தென்னும் ஓர் அரிய அதிகாரம் நிறுவி, அதன் கண் உணுமுறையினையே பெரிதும் விரித்து விளக்கி யிருத்தல் கொண்டும் இவ் வுண்மை துணியப்படும்.

“மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்”

" அறற தறிநது கடைபபிடித்து மாறலல
துய்க்க துவரப பசிதது "

எனனும அவ் வதிகாரததின விழுமிய திருக்குறள்களிஞு ஓம; " உணின எனபது அதன அருமை தோனற நினறது " எனவும, " உணடது அறருலும அதன பயஞுகிய இரதம அருதாகலான அதுவும அறல வேணடுமெனபாா மிகப பசிதது எனருா,......மாறு கொளளாமையாவது உணபான பகுதியோடு மாறு கொளளாமையும, காலவியலபோடு மாறுகொளளாமை யும, சுவை வீரியஙகளாற றமமுண மாறுகொளளா மையுமாம. அவையாவன முறையே வாத பிதத ஐக ளாஞுய பகுதிககு அடாதவறறைச செயவனவாதலும, பெரும்பொழுது சிறுபொழுதெனனுங கால வேறு பாடுகளுள ஒனறறகாவன பிறிதொனறறகாகாமையும, தேனும நெயயும தமமுள அளவொதது நஞசாதல போலவனவுமாம. அவறறைக குறிககொளளாது மனம படடவாறருற றுய்பபின அதனுனே நோயும மரணமும வருதலின, 'கடைபபிடித' தெனருா " எனவும வரு கினற அவறறின அழகிய உரைபபகுதிகளாலும மேலெடுததுக காட்டிய உண்மைகளெலலாம இனிது விளஙகிக கிடககினறன.

இனித, திருவளளுவா ஈஙகு விளங்கும இவ் விரண்டு அரிய பெரிய திருககுறள் முழுமணிகள் அருளிச செயததேயனறி,

" அறறுல அளவறிந துண்க; அஃதுடமபு
பெறறுன் நெடிதுயககு மாறு "

என மறறேர் அருமா மணிககுறளும இவறறி னிடையே வாயமலர்நது பெயது, மிக நுணணியதோா உணவு முறையிணைக காரண காரிய இயைபுடன விளககியிருககினறனா. தம பெருநூல முழுமையும ஒரு சிறு சொறறுனும வீணெனத தொடுததல செய்யாத இப பேராசிரியா, இம மூனறு குறளகளினும 'அறறது போறறியுணின', 'அற்றதறிநது கடைபபிடிதது', 'அறறுல அளவறிநதுண்க' என உணட தறுமாறு துவரப பசிததுநிறறலின முதனமையையமட்டும மீணடும் மீணடும முமமுறை அருளிச் செயதிருததலையும ; கருத் திருததத தகக இவவியலபு நுணணறிவு சானற நல லிசையுரையாசிரியரான பரிமேலழகா திருவுள்ளததினை ஈாகக, அவா "அற்றதறிந்தெனனும பெயர்ததுரை அதனை யாபபுறுததற பொருட்டு" என அழுத்தந தோனற உரை செய்திருததலையும ; இறுதியாக மேலெ டுததுக காட்டிய திருககுறளில **உண்டதறலுங் குறைய உண்ணலுமட்டுமே** வறபுறுததப்பட டிருத்ததலையுங் கூாநது ஆழநது கருதின, இடையிட்ட **பட்டினியினும** மிகக மருநது பிறிதில்லை யெனபது இனிது புலனுகும.

பணடு இனிய தெய்வவாழககையிற சிறநத முனி வரரெலலாம, இஙஙனம இடையிட்டுப படடினி கிடத் தலையும அளவிட்டு உணடி கொடுததலையும நனகு தோாந்து கடைப்பிடிதது, அவவாறறுல நோயறற வலிய

யாக்கையினையும், மாசற்ற பெரிய உணர்வாற்றலையும், ஊற்றற்ற நீண்ட பெருவாழ்வினையும் பெற்று அனைவர்க்கும் பெரும்பயனாய் உயிர்வாழ்ந்து விளங்கினர். **திருமுருகாற்றுப்படையில்,**

" நன்பகற் பலவுடன் கழிந்த உண்டியர் "

எனவும், அதனைத் தொடர்ந்தும், நுவலப்படும் நல்லுரைகள் சிலவற்றாலும் இவ்வுண்மை விளங்குகின்றதெனக.

---

## உ. உடை

பழநதமிழக கால நாகரிகச் செயதிகளில 'உடை' என்பதன கருத்துக்கள், இப பிறகாலத்தில மிக்க வியபபும ஆராய்ச்சியும விளைக்கவலலன. ஆயினும் இவைதமமின் பயன, இத தெனனுட்டினை ஓர் அரிய நன்னுடாகவும பொன்னுடாகவும மாற்றி யமைக்குந் திறதததாயிருககினறது நங் நாவலந தீவாகிய இந்திய நாடேயனறி ஏனை மேல கீழ நாடுகளெலலாவறறிலும் வாழ்ககை, தொழில, மதம், பொருளாதாரம், கலை முதலிய கருததுக்களில 'உடை' யைப் பறறிய ஆராய்ச்சி, அறிஞர் சாரணர் முதலிய எலலாருள்ளஙகளையும் மிகவுங் கவர்நது நிறகினறது.

### 1 உடையின் இயல்பு

புறததே மககள நலப பாதுகாப்பிற்கு, உணவுக கடுததபடி, உடையே கருதுதறகுரியது. 'ஊண, உடை' யென்னும வழககானும ஈதறியப்படும். 'உடுத்த' லென்னுஞ சொல இஙகே 'சூழக கட்டுதல' எனப் பொருடரும. 'ஆடுத' லெனனுஞ் சொல 'ஆடை' யெனபபட்டு ஒரு பெயராய் வழஙகுதலின், சூழக்கட்டும் அவ் வுடைதானும உடமபில நெளிநெளியாக அசைந தலையக கடடபபடுமெனனும பிறிதோருணமையும் பெறபபடுகினறது இக கருததுககளால், நாம அறிதற் குரிய நுண் பொருளகள சில உள்ளன

உடமபெடுதத மககடகு 'ஊண' 'உடை' என் னும இவ்விரணடையும முறையே அகப்பறறு புறப

பற்று என்று வகையுறுத் துரைக்கலாம். 'ஊண்' ணென்பது உடம்பின் 'உட்செலுத்தி நுகர்த' லென்னும் பொருட்டாகலின், நமதுடம்பு உணவின் பிண்டமாக உருவாகித் தோற்றுகின்றது. தோன்றலின், உணவுரு வென்றாலும் உடம்பென்றாலும் இரண்டும் ஒன்றேயாம். 'யான்' எனனும் அகப்பற்றுவது, இவ்வுடம்பேயாக லின், ஊணென்பதும் அவ்வகைப் பற்றின்கண் அடங் குதல் தானே பெறப்படும் இங்ஙனமே புறத்தில் இவ் வுடம்பினும் வேறாய அதன் நுகர்வு காரணமாகச் சூழ்ந்திருக்கும் பொருள்களெல்லாம் புறப்பற்றெனப் படுதலின் உடம்பை முதற்படியாகச் சூழ்ந்திருக்கும் 'உடை' யெனப்படுவது, அவ்வகைப் புறப்பற்றுக் களின் துவக்கமாகின்றது. இதிலிருந்தே, 'உடைமை' எனனும் ஏனைப் புறப்பற்றுக்களாகிய செல்வங்களெல் லாம் முறையே கிளைத்துச் சூழ்விட்டுச் செல்லுதலும் அறியப்படும். இவ்வாற்றால், 'ஊண்' ணென்பது ஏனை அகப்பற்றுகட்கெல்லாம் முன்னின்று காரணமாய், அவை யெல்லாவற்றையுந் தன்கண் அடக்கித் தனித் தலைமையாயப் பற்றுவிளைப்பதென்பதூஉம், 'உடை' யென்பது அங்ஙனமே ஏனை எல்லாப் புறப்பற்றுக்களுள் ளும் முதலேதுவாய உடம்பை முதற்கண் சூழ்ந்து அப் பற்றுக்களெல்லாந் தன் பெயர் முறையிலும் அடங்கா நிற்கத், தான் தனி முதன்மையுற்று அவா மிகுப்பதென் பதூஉம் விளங்கா நிற்கும். விளங்கவே, மாந்தர்தம் உலக வாழ்க்கையில் இருவகைப் பற்றியலகளும் 'ஊண்' 'உடை' எனனும் இவ் விருவகைப்பட்ட முதன்மைப்

பொருளகளில வநது அடஙகியியைதல இனிது புலனு கினறது.

உலகததில மககள எந நிலையில வாழகின்றனரா யினும, அவர்தம வாழககைநிலை இவ விருவகைபபட்ட முடிபில வநது நிலையுறும இயறகையுணமை, **ஆசிரியர் நக்கீரர்,**

> "தெணகடல வளாகம பொதுமை யினறி
> வெணகுடை நிழறறிய ஒருமை யோர்க்கும,
> நடுநாள் யாமத்தும பகலுந துஞசான்
> கடுமாப் பாாககுங் கலலா வொருவறகும்
> உணபது நாழி உடுபபவை யிரண்டே"

எனறு முடிததுரைக்கும மெய்யுரை கொணடும் ஐயுற வின்றித துணிநது கொளளபபடும. உணவு அகப்பற றுய் உடமபிருககுஙகாறுந தவநிலையினர்ககும விடுத லரிதாயிருததலின, தெய்வநலஞ சான்ற மெய்யுணர் வினரான **ஆசிரியர் திருவள்ளுவர்,** புறபபறறுககளாகிய உடைமைகள எலலாவறறையும ஒருஙகே நீககிப்,

"பிறபபறுக்க லுறறுர்க்கு உடமபும மிகை"

என்றருளுவாராயினா ! ஆதலின, மறறுந தொடாபபா டெவனகொல எனபதூஉம அவாதம வாயமொழி யாயிறறு.

## 2. உடை நுகர்பொருளன்று

இஙஙனம உடமபே அந நிலையினர்ககு மிகை யாயின, உடை எனனும புற உடைமைதானும அவர்ககு வேணடாப பொருளேயாம எனபது தானே

விளஙகுமனறே? இதனுலனறே, சிறிதும பறறிலலா தவரெனனும் வாயமையை விளககுதறகுச சிவ பிரான, அருகன முதலிய கடவுளரை 'நக்க' ரென் றும், வினை நீங்கிய தெயவ நிலையைப புததா முதலிய சமயததவா 'நிருவாணம' எனறுங கூறுவது இயலபா யிறறு. 'மாசு நீஙகி விரிநத விளககமுடையவ' ரென னும மங்கலப பொருளே இப பெயர் வழக்குகட்குக கருததாகும.

**சிலப்பதிகாரம்** எனனுந தமிழமணங கமழுந தீஞ சுவைக் காவியத்தின் வாழததுக் காதையில், கண் ணகி நலலாரின தோழியாகிய தேவநதி எனபவள அவா பிரிவாற்ருமல மலைநாட்டில விளஙகிய அவர் திருககோயிலின் முன்வநது அலறி அரறறுகினற உருக கமான நிலையை உரைக்குமிடததது, அவள தன்னுடன அழைத்து வந்த ஐயை எனனும இடையாகுலதது நங கையைச் சுட்டிக்காட்டி, 'இவள தாய நினபிரிவாறருது எரியில வீழ்நது உயிாதுறநதமையால மணம படுதது வாரினறி இவள திருமணமிலலா நிலையிலேயே இருக கினறனள' எனக் குறிததுரைத்து,

"அவ்வை மகளிவள் தான் 'அமமணம' பட்டிலா
வையெயிற் றையையைக் கண்டாயோ தோழீ
மாமி மடமகளைக் கணடாயோ தோழீ"

எனறு நெஞ்சங கரைநது அலறுதல எடுத்திசைககப் படுகினறது. இதன்கண் வரும 'அம்மணம' எனனுஞ சொல் திருமணம எனனும அழகிய பொருளுணாத்திச

சிறைநீங்கிய விரிந்த மங்கலவாழ்வை உணர்த்துதல் பெரி துங் கருத்திற் பதிக்கற்பாலது. 'மணம்' என்னுஞ் சொல் லும் ஈண்டு, 'மாசு கழுவப்படுதல்' என்னும் பொருள் பயத்தலின், இல்வாழ்வாயினும் அவ் வில்வாழ்வின் தவ வாழ்வாயினும், முற்றும் வினை நீங்கிய வீட்டுவாழ்வா யினும் யாண்டும், தூயதாய் விளக்கம் மிக்க விரிந்த மங் கல இயல்பினையே, உடையும் உடைமையுமாகிய பற் றுக்கள் முற்றும் நீங்கிய அம்மண மென்பது விளக்கி நிற்கின்றதெனல் தெற்றென உணர்ந்துகொள்ளப் படும்.

'மங்கல' மென்னும் நன்மொழியும் இப் பொரு ளதேயாதல், "மறுவில் மங்கலவணியே யன்றியும் பிறி தணி யணியப் பெற்றதை எவன்கொல்" என்னுஞ் சிலப்பதிகார அடிகட்கு உரை விரிக்கின்றுழி, அரும்பத வுரையாசிரியரும் அடியார்க்குநல்லாரும் 'மங்கலவணி' என்பதை இயற்கையழகென்றே கருதிச் செல்லலாற், றெளியப்படுகின்றது. உள்ளத்தின் ஒடுக்கம் நீங்கி அன் பென்னும் உயிரியல்பு கிளர்ந்தோங்கப்பெற்று விளக்கம் மிக்க இயற்கைக் கூட்டத்தினை யெய்தும் ஒரு மங்கையின் மங்கல மெய்ப்பாடுகளை விரிக்குமிடத்து, அக் கூட்ட நிலையிற் கடைசி மெய்ப்பாடாக ஆசிரியர் **தொல்காப்பியனாரும்** 'உடை பெயர்த்து உடுத்த' லை நுவன்று செல்லுதல், ஈண்டு நினைவுகூரற்பாற்று.

இங்ஙனம் மெய்யன்பு மெய்யின்ப நிலையில் இயற் கையே பற்றுதற்குரிய புறப் பொருள்களாகிய உடை முதலிய உடைமைகளின் நீக்கம், மக்களல்லாத மற்றச்

சிற்றுயிர்களெல்லாவற்றிற்கும் எப்போதும் இயல்பாகவே அமைந்திருக்கின்றது. மக்கட்கும் இவ் வுடை முதலிய புறப்பொருள்களின் சேர்க்கை செயற்கையாகு மல்லது இயற்கையாகாது. மற்று, உணவின் சேர்க்கையோ இவ் வுடை முதலிய பொருள்களினும் முற்றிலும் வேறுபட்டதாய் ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு மிக்க மக்கள் ஈறாக எல்லா உயிர்களாலும் இயற்கையே வேண்டப்படும் நீர்த்தாய், இன்றியமையாததாயிருக்கின்றது. இதனானன்றே, இவ் வியற்கையமைப்பினை நன்காராய்ந்து கண்ட அரிய முழுமுதலறிவினரான தொல்காப்பியனார், நிலங்கட்கு உணவு முதலிய கருப்பொருள்கள் பலவும் வகுத்துரைத்தவர் உடையைப் பற்றி யாதுங் கூறாதே போயினார்! மேலும், உயிர்களெல்லாவற்றிற்கும் அவ்வவற்றின் அறிவுநிலையை வகுத்தோதுமிடத்தும்,

"இரண்டறி வதுவே அதனொடு நாவே"

என உணவுக்காக ஓர் அறிவு நிலை சிறப்பாக அமைந்திருக்குமாற்றை யறிந்து அதனை எடுத்துக்காட்டியவர், உடைக்காக எதற்கும் ஏதோர் அறிவுநிலையுந் தனிமையில் அமைந்திராமையின் அதுபற்றி யாதும் உரையாது விடுத்தார்.

உயிர்கட்கமைந்த அறிவுநிலைகளெல்லாம், தொடுதல் சுவைத்தல் மோத்தல் காண்டல் கேட்டல் எனனும் புலனறிவுகள் ஐந்தும் இவற்றைப் பகுத்தறிந்துணரும் மனவறிவு ஒன்றுமாக அறுவகைப்பட்டு நடைபெறுகின்றன. இவ்வியல்பினை,

" ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே "

எனத் **தொல்காப்பிய நூலும்** நெறியுற வகுத்தோதுவ தாயிற்று. இனி, இவ்வாறுவகையறிவுகட்கு வேறாகப் பொருள்களை நுகரும் அறிவு வேறிருப்பதாக யாண்டும் எவரும் வகுத்துரைக்கவுங் கேட்டிலம். இங்ஙனம் இயற்கை வகுப்பும் படைப்புமாகிய இவ்வாறுவகை யறிவுகளுள்ளும் 'உடை' யென்னும் பொருளை நுகரும் அறிவுதான் யாது?

உடையானது, நாவுக்கும் மூக்குக்குஞ் செவிக்கும் உரிய நுகர்ச்சிப்பொரு ளன்று. மற்று, ஊற்றுணர்வுக்குங் காட்சியுணர்வுக்கும் உரிய நுகர் பொருளாகச் சிலர் கருதக் கூடும். ஆனால், ஆடை யுடுத்துதலின் முதல் நோக்கம் இப் புலனுணர்வுக்கன் றென்பது யாவரும் அறிந்ததேயாம். முதலில் அற்றம் மறைத்தலும், பின்பு புழக்கத்தில் வசதி காண்டலும், அடுத்து வெயில் குளிர் வாடைமுதலிய ஊறுகளிற் றப்பி யுய்தலும், மற்றதன்பின்னர் மேனியில் மெருகுறுத்தக் கருதலும் முறையே ஆடை யுடுத்தலின் முதன்மை நோக்கங்களாகக் கருதப்படுகின்றன. மேலும், ஊற்றுணர்வு ஆடையின்கண் உள்ளதினும், அணியினுட்

சிறறுயிரகளெலலாவறறிறகும எபபோதும இயல பாகவே அமைந்திருககினறது. மககட்கும இவ் வுடை முதலிய புறபபொருளகளின சேரககை செயறகையாகு மலலது இயறகையாகாது. மறறு, உணவின சேரக கையோ இவ் வுடை முதலிய பொருளகளினும முறறி லும் வேறுபடடதாய் ஓரறிவு உயிரமுதல ஆறறிவு மிகக மககள ஈறுக எல்லா உயிரகளாலும இயறகையே வேணடப்படும நீரதாய, இனறியமையாததாயிருககின் றது. இதனுனனறே, இவ் வியறகையமைபபினை நன காராய்நது கணட அரிய முழுமுதலறிவினரான தொல காபபியனர், நிலஙகடகு உணவு முதலிய கருபபொருள கள பலவும வகுத்துரைததவா உடையைப பறறி யாதுங கூறுதே போயினா ! மேலும, உயிரகளெலலா வறறிற்கும் அவ்வவறறின அறிவுநிலையை வகுததோது மிடததும்,

" இரண்டறி வதுவே அதனெடு நாவே "

என உணவுககாக ஓர் அறிவு நிலை சிறபபாக அமைந திருக்குமாறறை யறிநது அதனை எடுததுககாட்டியவா, உடைக்காக எதறகும ஏதோ ரறிவுநிலையுந் தனிமையில அமைந்திராமையின அதுபறறி யாதும உரையாது விடுததார்.

உயிர்கடகமைந்த அறிவுநிலைகளெலலாம, தொடு தல் சுவைததல் மோததல் காணடல கேட்டல் என் னும புலனறிவுகள ஐநதும இவறறைப பகுததறிந துணரும் மனவறிவு ஒனறுமாக அறுவகைபபடடு நடைபெறுநிற்கினறன. இவ்வியலபினை,

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே"

எனத் தொல்காப்பிய நூலும் நெறிப்பட வகுத்தோதுவ தாயிற்று. இனி, இவ்வறுவகையறிவுகட்கு வேறாகப் பொருள்களை நுகரும் அறிவு வேறிருப்பதாக யாண்டும் எவரும் வகுத்துரைக்கவுங் கேட்டிலம். இங்ஙனம் இயற்கை வகுப்பும் படைப்புமாகிய இவ்வறுவகை யறிவுகளுள்ளும் 'உடை' யென்னும் பொருளை நுகரும் அறிவுதான் யாது?

உடையானது, நாவுக்கும் மூக்குக்குஞ் செவிக்கும் உரிய நுகர்ச்சிப்பொரு ளன்று. மற்று, ஊற்றுணர்வுக்குங் காட்சியுணர்வுக்கும் உரிய நுகர் பொருளாகச் சிலர் கருதக் கூடும். ஆனால், ஆடை யுடுத்துதலின் முதல் நோக்கம் இப் புலனுணர்வுக்கன் றென்பது யாவரும் அறிந்ததேயாம். முதலில் அற்றம் மறைத்தலும், பின்பு புழுக்கத்தில் வசதி காண்டலும், அடுத்து வெயில் குளிர் வாடைமுதலிய ஊறுகளிற் றப்பி யுய்தலும், மற்றதன்பின்னர் மேனியில் மெருகுறுத்தக் கருதலும் முறையே ஆடை யுடுத்தலின் முதன்மை நோக்கங்களாகக் கருதப்படுகின்றன. மேலும், ஊற் றுணர்வு ஆடையின்கண் உளதினும், அணியினுட்

பெய்திருக்கும் மெனபஞ்சினகண் மிகுந்திருக்கின்றது. மற்று, ஊற்றுணர்விலும் பார்க்க ஆடைக்குக் காட்சி யுணர்வு மிகநெருங்கின்றதாயினும், அஃது ஓவியம்போல உடுத்தாது வைத்து இன்புறுதற்கேற்றதன்று. ஆடைகள், உடுத்தற்கண் மகிழ்ச்சி தரலல்லது வாளா காணுதற்கண் மகிழ்ச்சி விளைப்பன அல்ல. ஆனால் 'உடுத்த' லென்பதோ, மேற்காட்டிய ஐவகைப் புலனறிவுகளில் யாதொன்றனையுஞ் சேர்ந்ததாயில்லை. இவ்வாற்றால், ஆடையானது புலனறிவுகளின் இன்பத்துக்கு அப்பாற் பட்டதாயிருத்தல் சிறிது நினைந்து பார்ப்பார்க்கும் எளிதின் விளங்குவதேயாம்.

ஈண்டெய்திய இம் முடிபுக்கேற்ப, ஊற்றுணர் வாகிய ஓரறிவிற்கே உரியதாய மெய்ப்புலன் மாட்சிமைப்பட்டுள்ள மரஞ் செடி கொடி வகைகளும், சுவையுணர்வாகிய ஈரறிவிற்கே யுரியதாய நாப்புலன் மாட்சிமைப்பட்டுள்ள நந்து முரள் வகைகளும், மோப்புணர்வாகிய மூவறிவிற்கே உரியதாய மூக்குப்புலன் மாட்சிமைப்பட்டுள்ள சிதல் எறும்பு வகைகளும், காட்சியுணர்வாகிய நாலறிவிற்கே யுரியதாய்க் கட்புலன் மாட்சிமைப்பட்டுள்ள நண்டு தும்பி வகைகளும், கேள்வியுணர்வாகிய ஐயறிவிற்கேயுரியதாயச் செவிப் புலன் மாட்சிமைப்பட்டுள்ள மா, மாக்கள் வகைகளும் என இங்ஙனம் ஐவகைப் புலனறிவுகட்குஞ் சிறப்பி னுரிய விலங்கு முதலிய சிற்றுயிர்களோ ஆடையைப் பற்றிய உணர்வு சிறிதேனுமில்லாதனவாயிருத்த லின், 'ஆடை' என்பது வெறும் புலனுகர்ச்சிக்குரிய பொருளாதல் செல்லாதென்பது காண்டும்.

அற்றாயின், 'உடையுடுத்துத' லென்பது, 'மனம' எனனும ஆருவது அறிவினைப்பறறி அம மனவறிவு படைதத மனிதரால மேறகொளளப்படுவதாமோ வெனின, அவ்வியல்பினையும இஙகொரு சிறிது ஆராய்நது காணகுவம. ஆடையானது அம மாநதர்தம மாலும அவாதம மெயயறிவு மெயயினப நிலை யில பறறறுதறகுரிய பொருளாயிருததல மேலே விளககபபட்டிருககினறது மேலும், மனவறி வென பது புலன்வழிச செனறு பொருளியலபுகளை யுணர் தலே இயலபாவதனறித, தானே தனிததுணரும் வாயிலறறதாகும. 'உடுததல்' எனபது புலனறிவுகளில் ஒனறனறு யொழிதலின, புறபபொருள நுகாச்சிககுப் புலனவழிச செலலுதலலலது வேறு வாயிலிலலாததான மனமும அதனை மேறகொளளுதலிலலை யெனபது தானே உணர்நதுகொளளப்படும.

இனி, உலக வியறகையில மாநதராற் கருத்தானறி யறியததகக மெயபபொருளகள் சில ஈணடு ஆராய் தலும இன்றியமையாததாயிருககினறது. மனம புலன் வழியே செனறு பறறும புறப்பொருளகளும், தொடு தல் சுவைததல மோததலெனத தனிதத புலனறிவுகட் குரியனவாயக, கூடிய வரையிற புலனும் மனனும மாட் சிமையுறுதற கேறறனவா யிருததலை நாம நேரிற் காணகினறனம. இயறகைப பொருளகளாயின பெரும் பாலும அஙஙனமிருககும ; மறறுச செயறகைப் பொருளகளோ வெனின, பெருமபானமையும அவ் வாறிருததலிலலை.

ஆவின் மடியிலிருந்தொழுகுந் தீம்பால் அமிழ்தம் ஓர் இயற்கைப் பொருள் எனலாம். ஆனால், அப் பாலமிழ்தினை அடுக்களையில் ஏற்றி அட்டுச் சிறிது சர்க்கரையிட்டும் அல்லது சிறிது பிரை சேர்த்துத் தயிர் மோர் நெய் யாக்கியுஞ் செயற்கைப்பொருளாக மாற்றிச் சுவை பெருக்கி நாப்புலனையும் அதன் வழி மனத்தினையும் மாட்சிமைப்படுத்துதல் பொருந்தும். இனிக், கரும்பங் கழைகளில் இயற்கையே இனித்த சுவையுடைய தாய்ச் செறிந்திருக்குந் தீஞ்சாற்றையும் ஆலையிற் கொடுத்து நறுக்கிப் பிழிந்து, பின் அட்டுந் தொட்டும் இட்டுங், கட்டியுங் கற்கண்டுமாகச் செயற்கையில் மாற்றுப்படுத்திக், கழிபெருந் தீஞ்சுவை யாக்கிப் புலனையும் மனனையும் மாட்சிமையுறுத்தலும் ஒக்கும். என இவை போற் செயற்கைப் பண்டங்களிற் சிறுபாலன வாழ்க்கையின் நோக்குக்கும் மாட்சிக்கும் ஓரளவு ஒக்குமாயினும், அவைதாமும் இயற்கையே கிடைக்கும் பாலுக்குஞ் சாற்றுக்கும் ஒரு நிகரவாய்ப் பயன்படுவ வாகா. இவை போலும் நலங்குறையாப் பொருள்களே இங்ஙனமாயின், இயற்கையிற் சுவையும் ஆற்றலும் மிக்குப், பின் செயற்கையிற் பொறியிலிடுதலாலும் உலையிற் பெய்து அவித்துச் சாறு போக்குதலாலும் அவ்வியல்புகள் கெட்டு நலங் குறைந்துபோம் அரிசியுணவு முதலிய பண்டங்களாற் புலன் மன மாட்சிமைகட்கு எங்ஙனம் பயனுண்டாகும்?

ஆதலாற், செயற்கைப் பண்டங்கள் பெரும்பாலும் பிறவியை மாட்சிமை யறுத்துதற்கேற்றன

அல்லவாதல அஙகைநெலலியேயா மென்க. அதற்குக் காரணம, செயறகைப் பொருள்கள அததனையும உயிர்க் களையும அருளுயிர்ப்பும அற்று, மேனமேல் வளர்ச்சியும் மாடசியும் இலலவாய்க, குறைநதுந தேயநதும அழி தனமுக நோககிச செலலலேயாமென றுணரபபடும.

இதனானன்றே ஆசிரியர் தொல்காப்பியனார் முதலிய சானறோா தந தெய்வபபெறறி வாயநத நானமுழுமையும இயறகைப பொருளகளையுங கருததுககளையுமே பெரிது கிளநதோதி உணமை நலமும மாட்சியும ஒருஙகு விளைபபவரானா ! தொலகாபபியததில எழுததிகார சொலலதிகாரப பகுதிகளிலும ஆசிரியர் பெருமபாலும இயறகைப பொருளகளே விதநதெடுதது இலககண மியறறிச செலலலும, அவ்வழகிய நூறபோக குணாநது அந நூலின நலலுரையாசிரியாதாமும அததகைய இயல பொருள்களையே ஆணடாணடுங காடடுககளாக எடுதது விளக்கிச சேறலும் அவைதம்மைச சிறிதாழந தறிநது பயில்வாருமநனகறிநதேயாம. சொலலதி காரத்தில,

"செயற்கைப் பொருளை ஆககமொடு கூறல"

எனச செயறகைப பொருளபறறி நுவலப்படுமிடததும உரையாசிரியனமார் ஆசிரியர் கருததறிநது, அவ்வகைச் செயறகைப் பொருளாவன பயிா முதலாயின வெனத துணிநது, 'பயிர் நல்லவாயின' எனக காட்டறிவுறுத துத லொனறேயும் மேன்முடிபினை நனகு விளககி நிறுத் தும. பயிர் வளர்தலெனபது இயற்கை நிகழச்சியே யல

லால வேறில்லை. இயற்கையே நிகழும் அந் நிகழ்ச்சி களின் போக்கில் மக்கட்கு செயலும் நிகழ்ந்திசைந்து சேறலே அவர்க்குச் செயற்கையும் முயற்சியுமாம் என் பதும் இதனான் அறியப்படுகின்றது.

இங்ஙனமே உயர்திணை அஃறிணைப் பாகுபாடு களும், அஃறிணைக்கண் ஒன்றறி சொல் பலவறி சொற் பிரிவுகளும் ஆசிரியராலும் உரையாசிரியராலும் மிக்க கருத்தாக எடுத்திசைக்கப்படுதலும், மிக்க இன் பம் பயந்து உலகியல் நூலியல் வழக்குகளின் அமை வையும் அருமைப்பாட்டினையும் இனிது புலப்படுத்தா நிற்கின்றது. மக்கள் என்பவர் உயர்திணை எனவும், அவரல்லாத பிறவெல்லாம் அஃறிணை யெனவும் ஆசிரி யர் பாகுபடுத்தோதிய அருந்திறல் ஒன்றும் பெரு வியப் பினை விளைப்பதாகும். 'அவரல்லாத பிற' வென்றது, ஏனைச் சிற்றுயிர்களும் அச் சிற்றுயிர்களின் உயிரணுத் திரள் கலந்த ஐம்பூதப் பொருள்களும் அவற்றின் பகுதி களுமான **உயிர்ப்பியல்பு நிறைந்த இயற்கைப் பொருள்க** ளாகும். உரையாசிரியர்கள் இப் பகுதிகட்குக் காட் டும் எடுத்துக்காட்டுகளானும் இவ்வியல்பு இனிது விளங்கும். வீடு, புழங்குகலன்கள், ஆடை, அணி முத லிய உயிர்ப்பியற்கையற்ற செயற்கைப் பொருள்கள், இன்னோரன்ன பகுதிகட்குச் சிறந்த எடுத்துக் காட்டுக ளாகமாட்டா. **ஆசிரியர் தொல்காப்பியனார்** இங்ஙனம் பாகுபடுத்தியற்றிய திட்பநுட்பம்,

"மற்றுஉயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை"

எனப **பவணந்தியார்** விதநதியறறிய நனனூற பகுதி யில அததுணை நிலைபெருது சிதர்நது வேறுபட்டுப் போதலும ஈணடு நினைவுகூாந்து, நூறபொருளகளின வனமை மெனமை தேறுதல் வேணடும.

இனிப, பொருளதிகாரம் முழுமையும ஆசிரியர் இஙஙனமே இயறகைப் பொருளகளையும நெறிகளையும அவறறின நிகழசசிகளையுமே பெரிதெடுதது விளஙக வைததலும இஙகு நினைவுகூாதறகுரியது. அகம புறம எனனும பாகுபாட்டிற, புறததிறகுரிய திணைகளிலும், ‘உழிஞை’ எனனும அரண பகுதி போல்வன செயறகைகளாகத தோனறலாம, ஆனுல, அரண் வகை களைப பகுததறிநது கருதுஙகால, அவைதாமும பெரும் பானமை இயறகையரணஙகளாயிருததலும, அவை களே சிறநதனவாதலும நனகு விளங்காநிறகும. **தெய் வப் புலமைத் திருவள்ளுவனாரும்,**

“மணிநீரும மண்ணும் மலையும அணிநிழற்
காடும உடைய தரண்”

என இவ் வியறகை யரணஙகளை மட்டும் ஒருங்கு தொகுததுத் தனியாக ஒரு திருககுறள, அரண் என் னும பகுதியில முறபடக கிளநதெடுததோதுவா. ஏனை மரபியல செய்யுளியலகளினும் **ஆசிரியர் தொல்காப்பிய னர்,** இயறகை வழக்காறுகளையே பெரிதெடுத்து நுவனறு செலலல் தெளிபொருளேயாம. மரபியலில் ஓரிடததில அநதணர்க்குரியவாக நூல, கரகம், முக கோல, மணை எனனும் பொருளகளும, அரசர்ககுரிய

வாகக் கொடி, குடை, முரசு முதலிய பொருள்களும், வேளாளர்க்குரியவாகக் கண்ணி, தார் என்னும் பொருள்களும் சிறுபான்மை கூறப்பட்டுள்ளன. இச் செயற்கைப் பொருள்கடாமும், அகமுகமான சிற்சில நுண் கருத்துகட்குப் புறத்தே அடையாளப் பொருள்களாகக் கொள்ளப்படுவனவாயக் காணப்படுகின்றனவேயல்லால், புலன்களால் நுகர்ந்தின்புறும் நுகர்ச்சிப் பொருள்களாகக் காணப்பட்டில.

ஆதலால், **தொல்காப்பியம்** முதலான பண்டைப் பனுவல்களிலெல்லாம் ஆசிரியன்மார் யாண்டும் புலன் மன மாட்சிமைகட்குரிய உயிர்ப்பியல்பு மிக்க இயற்கைப் பொருள்களையே பெரிதெடுத்து விதந்து, மக்கள் வாழ்க்கையை இயற்கையொடு படுத்து உண்மை வளர்ச்சிக்கு இடஞ்செய்து போந்தமை நன்கு விளங்கலின், புலனும் மனனும் மாட்சிமையுற்றுப் பிறவிப் பயனெய்த வேண்டுவோர், பெரிதும் இயற்கைப் பொருள்களையே பயன்படுத்தி அவற்றின் உயிர்க் களை யாற்றலாலும் அருளியன்மைப்பாலும் மெய்யறிவு மெய்யின்ப வியற்கைகள் பெற்று மேம்படுதற்குரியராயிருக்கின்றனரென்க.

இனி, மலர் என்னும் ஓர் இயற்கைப் பொருளைக், கண்டும் மோந்தும் இன்புற வேண்டுவோர், செடியினிடத்து அம் மலர் பல பச்சிலைகளின் நடுவண் கொத்துக் கொத்தாக நறுமணம் பரப்பி மலர்ந்திருக்குந் தறுவாயில், அதனை அதனியல்பிற் கண்டும் மண நுகர்ந்தும் மகிழ்தலே சாலவும் விரும்பற்பாலது. மற்று, அம் மலர்க்

கொத்தைச் செடியினின்றுங் கொய்து பிரித்துக், காம்பு களைந்தும் இதழ் பிய்த்தும் வேறு வேறாக்கிப், பல வடிவு களில் மாலை தொடுத்தணிந்து மகிழ்தலோ புலனும் மன னும் மாட்சிமையுற வேண்டுவார்க்கு அத்துணைச் சிறப் புடைய செயலாகாது. ஆயினும், அம் மாலையிலும் முழு முழு மலர்களை அவற்றின் இயற்கையழகும் உயிர்க் களையும் மாறுறுவாறு மெல்லெனத் தொடுத்து அணிந்துகொள்ளலேனும் ஒரு சிறிது பொருந்துமென லாம். பண்டைக்காலத்தில் மலர்களானுந் தழைகளா னும் மரவுரிகளானும் ஆடைகளும் அணிகளும் அமைத் தணிந்துகொண்டமை இவ்வகையினுள் அடங்கக் கூடும்.

இங்ஙனம் இயற்கைப் பொருள்களே அமைந்த மலர்மாலை முதலிய செயற்கைகளே பிறவிமாட்சிமைக்கு அத்துணைச் சிறவாவெனின், நீலம் சிவப்பு பச்சை மஞ் சள் வெள்ளை முதலிய பற்பல வண்ணக் கடிதங்களா லுஞ், சாயந்தோய்த்த புற்கள் நெட்டி நூல் முதலிய பொருள்களாலும் மலர்கள் போலவும் மாலைகள் போல வும் மிகச் செயற்கையாக அமைத்து அவற்றை அணிந்து போலியாக மகிழ்ந்துகொள்ளல், சிற்றில் அமைத்துஞ் சிறுசோறட்டும் விளையாடுஞ் சிற்றினப் சிறுமகார்தஞ் சிறுபுன் செயலோடொப்ப வறிது பொழுது கழித்தற் கோர் வாயிலாகுமல்லது, மெய்யறிவு மெய்யின்பத் தழைவினை விரும்பும் மேல்வார்க்குச் சற்றேனும் ஏற்புடையதாகுமோ? ஆகாதன்றே! அத்தகையதே, **மிகச் செயற்கையான உயிர்ப்பியல்பற்ற ஆடை** முதலிய

பொருள்கள் புலனுகர்ச்சிக்காதல் அந் நுகர்ச்சியின்வழி ஈட்டலுறும் மனமாட்சிமைக்காதல் பயன்படுமென நம்பி, அவைதம்மிற் காட்சி ஊறு முதலியன கருதியும் பிறவாற்றானும் ஈடுபடுதலெனக.

## 3. உடுத்தலின் நோக்கம்

அற்றாயின், மாந்தர் பண்டுதொட்டே ஆடையுடுத்து வரும் வழக்கு எவ்வாறுதான் அமைந்ததோவெனின், அதுவே இக் கட்டுரையின் முடிபொருளாயிருத்தலின் ஈண்டது தெளியற்பாலதேயாம். ஆடைகள் நமது நாட்டில், 'உடை' 'போர்வை' எனவும், 'கச்சு' 'வட்டு' 'மெத்தை' 'சும்மாடு' எனவும், 'படாம்' 'திரை' எனவும், 'மேற்கட்டி' 'இரட்டுத்துணி' என வும், 'சட்டை' 'கொடி' 'உரி' 'பரிவட்டம்' எனவும் பலமுகமாகப் பயன்படுத்தப்பட் டிருக்கின்றன. இப் பிரிவுகள், முறையே உடம்பின் நலம் பேணுதற்கும், உடம்பின் உறுப்புக்களையும் பொருள்களையும் மூடிக் கட்டுதற்கும், உள்ளிருக்குங் காட்சிகளை மறைத்தற்கும், ஓவியங்கள் எழுதுதற்கும், கருத்துக்கேற்ற அடையா ளங்கள் காட்டுதற்கும் நம் முன்னோரால் கையாளப்பட் டுள்ளன. இந் நோக்கங்களுள், 'நலம்பேணுதல்' 'மூடிக் கட்டுதல்' 'காட்சிகள் மறைத்தல்' என்பன **மறைத்தல்** என்னும் ஒரு கருத்தாகவும், 'ஓவியம் எழுதுதல்' 'அடையாளங் காட்டுதல்' என்பன **அடையாளங் காட் டல்** என்னும் மற்றொரு கருத்தாகவும் அடங்கா நிற்க, உடையுடுத்தலின் நோக்கம் மறைத்தலும் அடையாளம்

புலபபடுததலும என இருவகைபபட்டு நிறறல தெற்றெனப் புலஞுகினறது.

ஈணடு 'மறைத்தல' என்பது பொருளகளேப் போறறிக் காததல, அது பொயாநாணததின நிகழ்ச்சி யனறு. இனி, 'அடையாளங் காடட' லென்பது, மறைய உளளன இனனவெனப புறத்தார்க்கு அடையாளமுகததான் வெளிபபடுத்துதலாம. எனவே,'உடை' எனபபடுவது எதனேயும மறைததுப போறறுமுகத்தால் அதறகு **ஆற்றல் ஏற்றவும்**, பின அதனே அடையாளங் காட்டி வெளிபபடுக்கு முகததால் அவ்வாறறலே அலே யலேயாக **உலகுக்கு உதவும்** பயன்படுவதோர் அரும பெருங கருவியாதல உணரபபடும். இரணடுஅரிய மாட்சிமையான இந நோககஙகள் காரணமாகச், சூழக்கட்டு தல என்னும பொருளில் 'உடை' எனவும்,அலேயலேயாக அசையக கட்டுதல எனனும பொருளில 'ஆடை.' எனவும நம முனனோர் முறையே பெயரமைத்து வழங்கி யிருககின்றனரெனின், அஃது எததுணே மாட்சிமை வாயநததாய் வியககறபாலதாயிருககினறது! இதன் பொருட்டே இக கடடுரையின முதறகண, 'உடை' 'ஆடை' எனனும இவ்விரு சொறகளின சொறபொருள் விதநது விளககி யெடுத்துககொளளபபடடன வெனக.

'உண' வெனபது உடமபின் வளாசசிககுரியதாகவும 'உடை' யெனபது உணாவின வளர்சசிக்குரிய தாகவும இஙஙனம வாழககையிற பயனபட்டுவரலின், இவ்வூணுடை யிரணடும மாநதாககு முதனமையான தேவைப பொருளகளாயினவெனபதும, அதனுல் அவ்

விரணடனையும மககள தகக அளவோடும மிக்க வள
னோடுந தூயமையோடுங கையாணடு நலமபெறறகுரிய
ரெனபதும ஈணடே அறியறபாலனவாம.

இனி, உடையுடுததுதலின இவவிருவகை நோககங
களைச சஙககாலச சானறோா எவவெவ்வகையாக ஆண்டு
தம உணாவை மாடசிமையுறுதது இனபுறறிருக்
கினறன ரெனபதறகு இஙகே சில குறிபபுககளெடுத
துக காணலாம. பொதுவாக, அறறஙகாததலெனபது,
உணாவு போறறலேயாம எருவாய கருவாய்கட் கிடை
யிலும இதயததிலுஞ சுடாவிடும உணாவொளியைஆற
றல மிகூஉம வணணங காததலே இதன் நோககமாம.
மேலாடை கீழாடைகளின கருததும இது நெறறிககு
நேரே புருவததிடையிற சுடரும ஒளி, கீழ இரணடிடத்
திலும போறறியதன பயனும ஆறறன மிககு, வெளிப
பாடு கருதியதாகலின, ஆணடு மறைவு கருததததகக
தனறு. கீழிருநது மேலெழூஉம உணாவாறறல தலை
யுசசியினவழிக கழியாவாறு அதன்கண்ணும ஆடை
போாத்தலுணடு. **திருமுருகாற்றுப்படையில** முனிவரா
இயலபு கிளககுமிடததுச,

" சீரை தைஇய உடுக்கையா "

என அவர்க்கு மரவுரியாகிய இடுபபாடை நுவனற
பினனரும,

" உரிவை தைஇய ஊனகெடு மார்பின "

என மாாபிற றோலாடையும விதந்தோதும நுடபம
இவ்வுணமைகடகு அரணாகும. இனிப்,

"புண்ணிய நறுமல ராடை போர்த்து"

எனனுஞ் சிலப்பதிகாரத் தொடாகக்கு அதன அரும்பத வுரைகாரர் "மலராகிய ஆடையை முககாடிட்டு" என உரைததலாற பெறும மரபும ஈணடு நினைவுகூரற குரிதது. உணாவுபோறறலாகிய இவ் வுயர் கருத்தின நறபழககமே, "உடுக்கையிழநதவன கைபோல" வெனனும உவமைககும உரிய வழககமாயிறறெனக.

இனி, மககளுடமபுகள் வாலாமையுடையவாகலின், அவாகடகுப பெருமபாலும பஞ்சாடையும், தெய்வ வடிவஙகள அஃதில்லனவாகலின அவைகடகுப் பொன்னுடையும உடைககுரியவாக நுவலபபடும. பண்டு பருததித தொழில இந நாட்டில வளமாக நடைபெறறு, நுரைமுகநதனன மெலலிய வெண பஞ்சாடைகள் நெயதுடுககபபட்ட வாயமை, வெள்ளிடை விலஙக லாம.

"நீளரை யிலவதது அலங்குசினை பயந்த
பூளையம பசுஙகாய் புடைவிரிநதனன" (பெரும்பாண்.)

"கோடைப் பருத்தி வீடுநிறை பெயத
மூடைப் பண்ட மிடைநிறைந தனன" (புறம்.)

"பருததிப பெணடின் சிறுதீ விளககத்து" ,,

"சோறமை வுற்ற நீருடைக் கலிஙகம" (மதுரைக்.)

"இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம" (மலைபடு.)

"மாசில காமபு சொலித்தன்ன
அறுவை உடீஇ" (சிறுபாண்.)

என்னுஞ் சங்கநூற் குறிப்புக்களும் ஈங்கு நினைவுகூரற் பாலன. இலவம் பஞ்சுச் செடிகளிற் பஞ்சு விளைத்த லும், அதனைச் சுகிர்ந்து மூட்டைகளாக்கி ஒருங்கு சேர்த்தலும், வீட்டு மகளிர் அவற்றை நுண்ணிழை களாக நூற்றலும், பின்னர் அந்நூல் கொண்டு பாவு விரித்துக் கஞ்சியிட்டு வகைப்படுத்தலும், அதற்குமேல் அதனை மிக மெல்லிய ஆடையாக நெய்தெடுத்தலும், தூயதாய் இனிதுடுத்தலுமெல்லாம் இக் குறிப்புக்களால் நனகு விளங்காநிற்கும். உலகத்திற் பொன்னுடை முதலியவற்றிற்கு இத்துணை விரிவான செய்முறைகட் குரிய நூற்குறிப்புக்கள் பெருகக் காணப்படவில்லை.

மக்களில் தெய்வ அருளொளி சுடர்ந்து விளங்கு வோராகக் கருதப்படுங் குருமார் அரசர் முதலிய நல் லோர் சிலர்க்கே, பொன்னுடை முதலியன அணியு மரபு முதலில் மிக அருகிக் காணப்பட்டுப், பின் ஏனை நிலை யினர் சிற்சிலரும் வாளா அவாவினால் உடுத்துச் சிறிது மகிழ்ந்துகொள்ளல் வழக்கமாயிருக்கின்றது. எனவே, மக்களிலுந் தெய்வத்திறமுடையோர் பொன்னுடை யணியும் இவ் வருகிய மரபுதானும், கடவுளர்க்கே அதனை வரைந்து சிறப்புரிமையாக நுவலும் இயல்பு பற்றியே யல்லது வேறில்லையென்று எளிதின் உணர்ந்து கொள்ளப்படும். கடவுளர்க்குப் பொன்னுடை நுவலும் நீரமை,

"பொலம்புரி யாடை வலம்புரி வண்ண !"

" திருமணி திரைபா டவிந்த முந்நீர்
வருமழை யிருஞ்சூன் மூன்றும் புரையு மாமெய் ;
மாஅ மெய்யொடு முரணிய வுடுக்கையை "

என வருகின்ற அழகிய **பரிபாடற்** குறிப்புக்களாற் றெளிவாகும்.

மேலும், தவவுருத் தாங்கிய முழுமுதற் பெருங் கடவுளான சிவத்தின் வடிவங்கட்குத் தவத்தின் மாட்சிமை தோன்றப் பொன்வண்ணமும் பொன்னிறச் செவ்வாடையும் உரைக்கப்படுதல் கருதற்பாற்று. மாந்தருள்ளும் அறவுணர்வும் ஒழுக்கமு முடையராயத் தவம்புரிவாரெவர்க்கும் உறுப்புச் சிவக்குமாகலின், அனைவர்க்குந் தவமுதல்வனும் முதியோனுமான சிவ பிரார்க்குச் செந்நிற உரு கூறுதே பெறப்படுமன்றே ! சிவத்தின் இளைய திருக்கோலமாகிய முருகன் றிரு வுருவத்தை நினைந்துருகிய **நக்கீரர்**,

" செய்யன்,சிவந்த ஆடையன "

எனத் **திருமுருகாற்றுப்படையிலும் ; நப்பண்ணனார்**,

" உடையும் ஒலியலுஞ் செய்யை...
உருவும் உருவத் தீ யொத்தி "

எனப் **பரிபாடலிலும்** விதந்தோதுந் திருமேனி திரு வாடைகளின் அருளுணர்வுக் குறிப்புக்கள் இங்கு நினைவுகூரற்பாலன. தவநிலைக்கண் அமையுஞ் செம்மை யுள்ளத்தின் வெளிக்குறிப்பாய இங்ஙனம் இறைவற்குச் செவ்வாடை உரைக்கப்படுதலால், அப் பெருமானற்றன் செந்நெறி நின்று தவநோற்கும் அந்தண மாந்தரும்

உலகிற் செந்நிறக் காவியாடை யுடுத்தல் மரபாயிற்று. இவ்வியல்பு,

" கல தோயத் துடுத்த படிவப் பார்ப்பான் "

என்னும் நப்பூதனாரது முல்லைப் பாட்டினானும் அதனுரையினானும் விளக்கமாம்.

இனி, இங்ஙனந் தவவுணர்வுக்குரிய திருமேனியின்ப போற்றுருவமாகவும், அவ்வுள்ளக் குறிப்பின புறத்தடையாளமாகவும் போர்த்துடுக்கப்படும் உடையானது, உலகிற் பிறர்க்கு அவ் வகனுணர்வுப் பெரும் பொருளை இயக்கிப் பாய்ச்சுதற்காக அசைத்துடுக்கவும் படுமென்பதற்கு, ஆசிரியர் நக்கீரனாரது அழகிய திருமுருகாற்றுப்படையின்கண் வருகின்ற குன்று தோறாடற் பகுதி கருத்திற் பதிக்கற்பாற்று. செய்யன், சிவந்த ஆடையன், செயலைத் தண்டளிர் துயல் வருங் காதினன், கச்சினன், கழலினன், தகரன், மஞ்ஞையன், சேவலங்கொடியன் எனவெல்லாம் ஆடை முதலியன நுவன்று வேலனைக் கிளந்தோதியபின், குன்றத்தே மகளிர் குரவையாடி அசைய அவர் கையினைத் தழீஇ யெடுத்து அவனும் அவருடன் கலந்து விளையாடுவன என முடிக்குமிடத்திற், கருத்தாய்,

" மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன் "

என, நிலத்தே தொடுமபடி தனது மருங்கில் அசைய ஆடை யுடுத்தனனாய், அவன் அங்ஙனம் ஆடினனென மறித்தும் ஆடை விதந்தோதப்படும் நுட்பம் அப் பகுதியிற் காணப்படுகின்றது. அங்ஙனங் குறவர் குடியோடு

கலநது குன றுதோ ரடலும முருகன பணபாயின், அவன, தன திருவுளளச செமமையினை, அசைய உடுத துந தனது செயப ஆடையானும அவாககு இயக்கி ஊட்டும அருமை தெறறெனத தெளியபபடுமனறே ? அஙஙனங கருததியககடினறேல, ஆடுதறகுரிய நேரத தில ஆடும வசதிககாக மேற றாககி வரிநதுடுதத வேண டும ஆடையை, அது நிலநதாவி நெளிநதசையுமபடி சரிநதுடுததல பொருணமை பெறுதுபோம. ஆனல ஆணடு அப பகுதியோ, மிகக பொருணமை தோன்றச,

“ செயயன் சிவந்த ஆடையன்...
நரமபார்த தனன இனகுரல தொகுதியொடு
குறுமபொறிக கொணட நறுநதண சாயல
மருஙகிற கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின இயல ஏநதி
மென்றேட் பலபிணை தழீஇத தலைத்தநது
குன்றுதொ றுடலுமநினற தன் பணபே ”.

என நுட்பதிட்பஞ் செறிய விளஙக இனிது ஓதியருளப பட்டிருககினறமை காணக

இனித, **தவத்தின்** ஆறறலையும இயக்கத்தையும போறறுதறகும் பிறாககுணாததி வெளிப்படுத்துதற கும் இயக்குதறகும் உறற கருவியாகச **செந்நிற ஆடை** இஙஙனம் மேறகொளளபபட்டமையொபப, **ஞானத்தின்** திருவடையாளமாக **வெண்ணிற ஆடை** பூணலுந தொன்று தொட்ட மரபாயப் பயினறு வருதல் கருதற பாலது. இவ்வுணமை **இறையனரகப்பொரு ளுரைமுகத்து,** அவ்வுரை அரங்கேறிய காலதது ஆலவாயக கடவுளின

ஆணையால் 'உருத்திரசன்மன்' என்னும் ஐந்தாட்டைச் சிறுன் ஞானத்தின் திருவுருவாய் அவையிற் றலைமை தாங்கியிருந்து மெய்யுரை ஈதெனப் புலப்படுத்தினுன் என்று உரைக்குங்கால், அப் பிள்ளையைச் சங்கத்தார்,

"வெளியது உடீஇ, வெண்பூச் சூட்டி, வெண்சாந்தணிந்து, கன்மாப் பலகையேற்றி இரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைப்ப, எல்லாரும் முறையே உரைப்பக் கேட்டு வாளா இருந்து,... கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த விடத்துப் பதந்தோறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான்; இருப்ப ஆர்ப்பெடுத்து, 'மெய்யுரை பெற்றும் இந்நூற்கு' என்றார்"

என்று நுவலப்படுகின்ற குறிப்பினால் இனிது விளங்கா நிற்கும்.

ஆற்றற்கும் அறிவிற்கும் முறையே இங்ஙனஞ் செந் நிறத் தோற்றமும் வெண்ணிறத் தோற்றமும் உரித்தாதலை, மாங்குடி மருதனுரென்னும் புலவர் தலைவர் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை நோக்கி, 'நீ இங்ஙனந் தவஆற்றலும் மெய்ஞ்ஞான மும் உடையையாய் விளங்குக' வென மெய்ப்பொருள் செவியறிவுறுக்கும் மதுரைக் காஞ்சியின் இறுதியில், அவ் விருபே ரியல்புகட்குஞ் செஞ்ஞாயிற்றையும் வெண்டிங் களையும் உவமங்கொண்டு,

> "பெரியகற்று இசைவிளக்கி
> முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
> பன்மீன் நடுவண் திங்கள் போலவும்
> பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கி"

என அழகுற இசைக்கும் நல்லிசைப் பகுதியானும் நுண்ணுணர்ந்து தெளிந்துகொள்ளலாம். ஞானத்தின் திருக்கோலம் வெண்கோலமாதல் இவ் வகையினெல்லாம் இனிது பெறப்படுதலொப்பக, கலைஞானத்தின் முதல்வியாய் விளங்கும் நாமகளின் திருக்கோலமும் வெளியது உடுக்கும் வெண்கோலமேயாதல், ஈண்டுப் பெரிதும் நினைவுகூரற்பாலது.

இனி அறிவின் செல்வியாகிய கலைமகள் படைப்புக் கடவுட்கோர் ஆற்றலாய் அவன்கண் உறைவோளென்பதும், அப் படைப்புக்கடவுளாகிய அயனாரும் 'மறையோன்' என ஞானப்பொருளில் அழைக்கப்படுவான் என்பதும், படைப்பென்பது ஞானத்தினடியாக நிகழற்பாலதென்பதுணர்த்தும். இதனால், ஞான நிலைக்குரிய வெண்கோலம் அதன் இயக்க விளைவாகிய படைப்பின் நிகழ்ச்சிக்கும் ஒக்கும்; தவவுணர்வுக்குரிய செங்கோலம் அதன் இயக்கமாகிய மலங்கெடுத்தலென்னுந் தெறுதல் நிகழ்ச்சிக்கும் ஒத்தல்போலவென்பது. இதனானன்றே, மாதருடம்பிற்கு மாசுபோக்கிப் புத்தாற்றல் விளைக்கும் பூப்பின் புறப்பாட்டிலும், அவ்வாற்றல் பேணலின் அறிகுறியாக ஏனைக் காலங்களிலும் அம்மாதரார் செவ்வணி யணிந்து **செங்கோலங்**கொள்ளலும், பின்பு மக்கட்படைப்பின் ஏதுவாகக் கணவனொடு கலையுணர்வினராய் அளவளாய்க் கலவிக்கெதிருங் காலங்களில் அவ்வரத்தம் நீக்கி வெளியதுடீஇ **வெண்கோலங்**கொள்ளலும் இயல்பாயிற்று! பூப்புக்காலமாகிய ஆற்றல் பெறூஉம் நிலையில் மாதர் செங்கோலங் காட்டல்,

"அரத்தம் உடீஇ அணிபழுப்பப் பூசிச்
சிரத்தையாற் செங்கழுநீர் சூடி"

எனத் திணைமாலை நூற்றைம்பதினும்,

"பூப்பு நிகழ்ந்த நாளாலே சேடியைச் செங்கோலம் செய்து
செப்புப் பாலிகையுடன் செம்பூவும் நீருங்கொண்டு பூவும்
நீரும் அவன் அடிமேற் பெய்து போக உணரும்"

என இறையனாரகப்பொருளுரையினும் வருஉங் குறிப்புகளானும், மற்றுப் புணர்ச்சிக் காலமாகிய உணர்வு மிகூஉம் நிலையில் அம் மங்கையர் வெண்கோலம் பூணல்,

"துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்து"

எனப் பட்டினப்பாலையினும்,

"பட்டுடுத்தவற்றை நீக்கிப் புணர்ச்சிக்காலத்துக்கு நொய்ய
வாகிய வெள்ளியவற்றை யுடுத்தும்"

என நச்சினார்க்கினியருரைக்கும் அதனுரையினுங் காணப்படும் குறிப்புகளானும் விளக்கமாம்.

இனிப், படைப்புக் கோலமாகிய இதுவே காரணத்தால், படைக்கப்படும்பொருளாகிய மகவு பிறந்த நாளும் வெள்ளணியாயிற்று. மகவுபிறந்த செய்தியைத் தலைமகன் முதலியோர் அறிந்துகொள்ளும் பொருட்டுத் தோழி முதலியோர் வெண்ணிற ஆடையுடுத்து வெண்கோலங் கொள்ளலும் மரபாகும். இதனால், ஆண்டுதோறுங் குரவர் அரசர் முதலியோர்க்குக் கொண்டாடும் பிறந்த நாள் விழாவும் வெள்ளணி, வெள்ளணிநாள், வெள்ளணிவிழா எனப்பட்டது. அஞ்ஞான்று, அவ் வரசர் முதலியோர்

வெளியது உடீஇ வெணகோல முடையராய்ப் பொலிநது விளஙகுவர். **நச்சினார்க்கினியர்** இவ் வெண்கோல விளககததைப 'பிறநதநாளொபபனை' என்பர். மகிழ்சசி மேவிய இவ் வெள்ளணி நாளில, அந நாட் குரியோர் பிறாககு நலமாவனவெலலாங கருதிச் செய்வா. பழந் தமிழ் மரபின செழுஙகளஞசியமான **சிலப்பதிகாரம்** என்னும பெருஙகாபபிய நூலில, **சேரன் செங்குட்டுவன்** றன பிறநதநாள விழா,

> " நாளை ...... ....மன்னா அடித்தளை
> நீககும வெள்ளணியாம்"

என, இந நிகழசசிகள் தோனறக குறிககப்படுதல நினைவுகூர றகுரிதது.

இனித, தேவத தனமையும, தவ ஆறறலும, ஞான வளனும், அவறறேதுவாக நிகழும அறிவுச செயலகளு மலலால, ஏனை உலகியற கருததுக்கள சிறசிலவறறிற கும் அவ்வவறறைப **போற்றலும் இயக்கலுங்** கருதி, ஆடைகள் மேறகொளளல அறிதலவேண்டும. சில அலுவலகடகு அவறறிறகான அடையாள உடைகள உணடு. அரசனுக்கு 'மெய்காபபாள'ரா யிருபபோர் 'தூதர்' முதலியோா, உடமபிற சட்டையிட்டுத தலை யிலும் பாகை யணிந்து தததம அலுவல பாாககும மரபு, **முல்லைப்பாட்டு, சிலப்பதிகாரம்** முதலிய நூலகளில முறையே,

> " துகில் முடித்துப போர்த்த தூஙகல ஓஙகுநடைப
> பெருமூ தாளர் ஏமஞ் சூழ "

"சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற
கஞ்சுக முதல்வர் ஈரைஞ்ஞூற் றுவரும்
சேயுயர் விற்கொடிச் செங்கோல வேந்தே
வாயி லோரென வாயில்வந் திசைப்ப"

என நுவலப்பட்டிருக்கின்றது. தூதராவார் 'கஞ்சுக மாக்க' ளென்றே சட்டைப் பெயராற் பிறுண்டும் வழங்கப்படுகின்றனர். குதிரை வீரராயுந், தத்தந் தொழில வல்லுநராயும் அரசனுழை அலுவலபார்க்கும் யவனர் முதலியோர்,

"மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்"

"உடம்பின் உரைக்கும் உரையா நாவிற
படம்புகு மிலேச்சர்"

எனவும், அரசன்கண் அலுவல ஏற்கும் மங்கையர்,

"இரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்"

எனவும் உரைக்கப்படும் ஒப்பனைபற்றிய உரைகளும் இவண் கருதற்பாலன. அலுவல் ஏற்பார்க்கு அடையாளமாக அரசனால் அளிக்கப்படும் அங்கிகள் 'பரிவட்டம்' எனப்படும். அரசன் கோயிலிற் றொடர்பு கொள்வோரே யன்றி, எல்லாம் வல்ல ஆண்டவன் றிருக்கோயிலிற் றொடர்புகொள்ளும் அருட்பணி வல்லார்க்கும் இங்ஙனம் பரிவட்டம் என்னும் கடவுளாடைகள் வழங்கப்படுத லுண்டு.

எனவே, மனனுணாவுகொண்ட மககள் உடையுடுத் தலின கருதது, அவரவர் உணர்வுகளுஞ் செயல் களும ஆறறல் மிகுமாறு போற்றிக் காத்தறகும, பின னா அடையாள முகததாற புறத்தே வெளிபபடுத்திப் பிறாககவறறை இயககி ஊட்டுதற்குமாதல் இவ்வாற் ருல் இனிது விளங்காநிறகும என்பது.

---

## ௩. கல்வி

ஊண உடை, வாழக்கையின பொது நலஙகளாய் அனைவர்க்கும உரியவாகினறன. கலவி, வாழ்க்கையின் சிறபபு நலமாயச் சிலாககே அமைகினறது. அனைவருங கல்வி கறபினும் அவர்ககது பொதுக கலவியாகவே அமைய, நுணணுணாவு மிக்க சிலாககே கலவி மாட்சிமை யெயதிச சிறக்கினறது. அத்தகைய கலவி நலம அமைநதோா, பண்டுதொட்டே நங் தமிழகத திற 'புலவா' எனப் போறறப்பட்டு வருகினறனர்.

### 1. கல்வியின் மாட்சி

'கலவி' எனனுஞ் சொலலும் 'புலமை' எனனும் மொழியும தமிழமொழியிற்,சிறந்த கருத்துககளைக் கருக் கொண்டு மிககஆறறலோடு விளங்கிவருகினறன. 'கலவி' யெனனுந் தமிழ்சசொல 'ஆழ்ந்து தெளிதல' என னும உயாநத கருததையும், 'புலமை'யெனனுந தமிழ மொழி 'புறததே காணும உலகியற்கைககளைப புலனறிவு களாலும ஆயநது பயிலல்' என்னும முதிர்ந்த பொருளை யும உடகொணடுளளன. இதனால, உலகியற்கைகளை நன்காராய்நது பாாததுப பின்னர் அவற்றின ஒடபத்தை ஆழநதாழ்நது கண்டு மெய்மமை தெளிதலே கலவியும புலமையுமாதல் இனிதுணரப்படும்.

பெறலரியதான இவ்வொண்மையினை அடையப் பெறும நலலோரல்லரோ வாழ்கையினகணணும் ஒளி மிக்கு உயாநது விளங்குவா! இதனாலன்றோ, செலவததி

னுரு செலவாககினும மிகச சிறநதவனுன **பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்** எனனும முடி யுடைப் பேரரசனே,

"உற்றுழி யுதவியும உறுபொருள கொடுத்தும
பிறைறநிலை முனியாது கற்றல நனறே"

என்று ஓா அரிய செயயுள இயறறிக கலவியின ஒளி விளககததை மிகப் பெரிதும விருமபி நினறனன. இப் புலமைக கல்வி யுடையோரே வாழககையினகண ஒளியுடையராவா எனனும அருமபெருண்மையும,

"ஒளியோர் பிறநதஇம மலர்தலை யுலகதது
வாழேம என்றலும அரிதே, தாழாது
செறுத்த செய்யுட செயசெந நாவின்
வெறுத்த கேளவி விளஙகுபுகழக் கபிலன
இன்றுள ளுயின் நன்றுமன்"

எனனும **பொருந்தில் இளங்கீரனுர்** செயயுடகண நன்கு விளஙகுகினறது. இச செயயுளின உரையாசிரியர், 'ஒளியோா' எனனும அழகிய மொழிககுக் 'கல்வியால விளககமுடையோர்' எனறே பொருள் விரிதது, 'ஒளி யோர் எனறது, கபிலன முதலாயினுரை' என விளகக மும வரைநது, 'தாழாது செய்யுட் செய நாவின் விளஙகு புகழக கபிலன' எனனும இச செய்யுட் பகுதியை உடகொணடு மெயமமை தெளிவிததிருததல இஙகே நினைவுகூரறபாலது. இவவுணமைககேறபப பண்டைக் காலததிற 'கபில' ரெனனும புலவா பெருமான், முடி யுடைப பெருமனனா, குறுநிலமன்னர், பெருஙகுடி

மக்கள் முதலிய எல்லாச் செல்வரோடும் அணுக்கராய் நேயங்கொண்டிருந்து, தாமும் ஆண்டாண்டும் ஏராள மான நிலப்பகுதிகளும் ஊர்களும் உடைய பெருஞ் செல்வராயத் திகழ்ந்ததூஉமன்றி, ஆழ்ந்தகன்ற பெரும் புலமையும் பொய்யாநாவு மெய்திப் புலனழுக்கற்ற அரு ளொளியராயும் மிளிராநின்று விளங்கினர்.

மக்களாயப் பிறந்தோரைக் கலவிப் புலமையானது இத்தகைய மாண்ணொளி விளக்கத்தில் இருமை நலங்களும் நிறைவுற நிறுத்துதற்குக் காரணம், அவரதறிவை அது புறப்பொருட் பயிற்சியானும், அகனுணர்வின் அழுந்து தலானும் மேலுமேலும் விளக்கமும் விரிதலுமுறச் செய்து அவரை ஒளியராக்குதலேயாகும். இப் பயிற்சி யும் ஆழ்தலுமில்லையேல் மக்களறிவு எத்துணை நல முடையதாயினும் மேன்மேல் வளர்ச்சியும் மாட்சியும் எய்தாது மழுங்கி இருண்டு போம். இவ்வுண்மை, தெய்வத் திருவள்ளுவார்தம் மெய் வந்த திருவுள்ளத்தை மிகக் குழையச் செய்ததனாலன்றே, அவர் மிகக் கவலை யுடையராய்க்,

> “ கல்லாதான் ஒட்பங் கழிய நன்றாயினுங்
> கொள்ளார் அறிவுடை யார் ”

எனவும்,

> “ யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
> சாந்துணையுங் கல்லாத வாறு ”

எனவுந் தம் அரும்பெருந் தமிழ் மறையில் அருளிச் செய்வாராயினர் !

## 2 சங்ககாலக் கல்வி

இனிப், புறபபொருட் பயிறசியும அகககருத் தாழ் தலுமெனனும் இக் கலைபயில முறையில, முன்னது பின மாட்சிமைக்கு ஏதுவாய நிற்றலின அதனை எந்நிலை யிலும மக்கள் தாமாக இகழ்ந்தொதுக்குதலாகாது. புறததே பொருளொடு பயின்றுவரும போழ்தே அக னுணர்வு ஆழநதாழ்நது தெளிவு கண்டு செலலல், சிறந்த பயிறசி முறையாகும. சஙகநூற் புலவர்கள இந்நுட் பங் கடைபபிடிததுப் பயிறலிற றேறினோராகலின, அவரியற்றிய நறுந்தமிழப் பாடடுகககள் செறுதத செய் யுட்களாயக், கல்விககு வரமபாய்ச், சொலலும பொரு ளுஞ சுவை மிககு, இறவா உயிாக் களை மேவி, எவர்ககும் பயன்படுதல சான்று, மெய்ச்சுடர் வீசி இனிது திகழ் கினறன ! புறத்தே உலகப் பொருள்க ளில்லையேல் அல் லதககதே அவறறைத் தெளிந்து நுகாதலிலலையேல, யாண்டும் பிறவியுமிலலை, வாழ்க்கையுமிலலை. கலவி, வாழககையின விளக்கத்துக்குரிய கருவியாயின, இங்ங னம பொருள்களையும உணாவுகளையும் அவை இயறகை யில் இழைநது நிகழுமாறே பட்டாஙகு பயின்று தெளி தல் இன்றியமையாததனறே !

மிகப பழையதான **தொல்காப்பியத்தின்** சிறப்புப் பாயிரததில,

"வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின் ..
செநதமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முநதுநூல கண்டு முறைப்பட எண்ணிப்
புலநதொகுத தோனே போக்கறு பனுவல"

எனவும், தொல்காப்பிய அகத்திணை யியலில்,

“ முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை ”

எனவும் வருகின்ற பொருட் கருத்திறைந்த தொடர்களில், இக் கருத்துக்கள் எத்துணை இழைவாய நுட்பதிட்பச் செறிவுடன் காணப்படுகின்றன ! ‘முதல் கரு உரிப் பொருள் என்ற மூன்று முறை சிறந்தன ; பாடலுட் பயின்றவை’ என்னுங் கருத்துக்களும், முதற் பொரு ளுங் கருப்பொருளும் புறப் பொருள்களாதலும், ஏனை யுரிப்பொருள் அப் புறப்பொருள்களின் பயிறலாற் போதருந் தெளிவுணர்வாய அகப்பொருளாதலும், செய்யுள் செய்யுங்கால் இம் முதல் கருப் பொருள்களும், உரிப்பொருள்களும் ஏதுவும் பயனுமாய் இழைந்தெதி ரும் இனிமையை உலகியற்கையில் இனிது பயின்று அவ்வினிமையின் ஓவியமாயச் செய்யுள் யாத்தலே பாடலுட் பயின்று வரும் மரபாதலும், இக் கருத்துக் கேற்பத் தொல்காப்பியம் முழுவதூஉம், அம் முதுபெரு நூலின் வழியெழுந்த சங்கஇலக்கியங்கள் முழுவதூஉம் பழைய தமிழ் நல்லிசைப் புலமையோ ரனைவரும் ஒப்ப நூற்பாக்களுஞ் செய்யுட்களும் இயற்றிக் கலைப்புலமை நடத்தியிருத்தலும் நனகு நுனித்தறிந்து மெய்ம்மை தேறுதல் வேண்டும்.

நாம் பயிலுதற்கும், அதனவழி ஆழ்ந்து தெளிவு பெறற்கும், அவ்விரண்டன் பயனாக வாழ்க்கை

செய்தற்கும் நமக்குக் கருவியாக நம்மெதிரில் உள்ள தெல்லாம் இவ்வுலகமேயல்லது வேறில்லை உலகமே மக்கள் பயின்றாழ்ந்து தெளிதற்குரிய இயற்கைப் புத்தகம். மற்று, மக்கள் தங் கையகத்தே கொண்டோதுஞ் சுவடிகளெல்லாம், அவை நற்றூல்களாயின், இவ்வுலகியற் கையின் சிற்சில படிகளேயாமல்லாற, புதியபுதிய கருத்துக்கள் எதிர்ந்தெதிரா தெழூஉம் இயற்கை உயிர்நிலையமாகிய உலகம் என்னும் புத்தகமாகா. ஆதலாலன்றே, அகத்தே கலவிக் கலவி ஆழ்ந்து பயிலுங் கலவியுடையோர், புறத்தே புலனறிவின் றுணையுடன் அது செய்தற்குரியராகலின்,'புலவர்' என்னும் பெயரால் என்றும் ஒரே பெயராக அவர் அழைக்கப்படுகின்றனர்! திருவள்ளுவர் தம் அரும்பெறல் நூலிற், கலவியெனனும் அதிகாரத்தில்,

> "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
> அனைத்தே புலவர் தொழில்"

எனக் கற்றார்க்குப் பெயராகப் 'புலவர்' என்னும் இவ்வொரு பெயரையே தக்க கருத்துக்களோடு வழங்குதல் பெரிதுங் கருத்திற் பதிக்கற்பாற்று. புறம் விரியாது அகத்தேமட்டும் ஏதுங் கருதுதற்குரியார், பிறரோடு உவப்பத் தலைக்கூடி அளவளாவுதல் மாட்டாராய் வாழ்க்கைக்கு ஒவ்வாராகலின், அது செய்தற்குரியார் அகத்தெளிவின் பொருட்டுப் புறவியற்கைகளை ஆராயுநீரரான புலம் படைத்த புலவரேயாதல் செல்லுமென றறிவுறுப்பார், அக் கருத்துக்களையும் உடன்பெய்து அப் பெயரை இசைத்து, அவர் புலமைக் கலவியின

பயனுள தொழில் வகையினையும் இனிது புலப்படுத்து தல் காண்க.

உவப்பத் தலைக்கூடி உளளப் பிரியும் இம மாண புடைத் தொழிலே புலவர் தொழிலாதல, சங்ககாலம முழுமையும மாரிப் பொழிவேயென நிறையப் பொழி யபபட்டிருக்குஞ சஙகச் செய்யுட்களினெல்லாம் இனிது விளஙகிக் கிடததல யாவரும் அறிந்ததேயாம. 'புலவா தொழில்' எனறு வநத மேறகாட்டிய திருககுறட் டொடருக்கு உரையாசிரியர் பரிமேலழகர், "தாம் நல்வழி யொழுகல பிறாககுறுதி கூறல் என்பன இரணடும் ஒனறுயடஙகுதலின், அத்தனமைதடதன்றார். அத் தன்மை அப் பயனைத் தருந் தன்மை. நலலொழுககங் காணடலானும, தமக்கு மதுரமும் உறுதியுமாய கூற றுக்கள் நிகழ்வெதிர்வுகளின இனபம பயத்தலானும் கற்றார்மாட்டு எலலாரும அன்புடையராவர்" என வகுத்துரைக்கும் அநதண்மை யுரையினுல, தாம் நல் வழியில ஒழுகியதோடனறிப பிறர்ககும அஞசாது உறுதி கூறலும, அதூஉம சொலலானும பொருளானும மதுரம பயகக உரைதது அளவளாவலும மேற் கொணடு, உலகுககு நிரம்பப் பயனபட்டு விளஙகிய பணடைப் புலவாதம செயல, உணமையிற புலமைத் தொழிலேயாதல தெறறெனத தெளியபபடுகினற தனறே!

புறததொழிலின் அறிவும அதனவழி அகத் தினிமையின உணாவு மிலராயின அப புலவரெலாம இஙஙனம மதுரம் பயக்கச சொலலாடலும, அளவளா

வலும் ஒலலுமோ? அவா செய்யுட்கடாம எழிலும் இனிமையுங கருவுற்று வளனும நலனும பயந்து இன்றுகாறும நிலைபெறறுலவுமோ? ஆதலாற, புறப் பொருள் விரிவும் அதன் பயனுன அகப்பொருட்டெளிவு மென இருவகையிழைவிலும நுழைவுடையராயப் பயினருழுந்து தெளியும் புலமைக் கலைநலமே, நுண மாண் நுழை புலம விழையும ஒணமையாளாகக மேன் மேல் ஒளிதருமென் றறிதல் வேணடும. புறத்தறிவோடு மட்டு நினறு அகத்தினிமையை இழையப் பயிலாமை மறுக்கபபடுமன்றிப், புறததறிவின பயிறசி அதனுல் யாணடும இகழபபடாதெனபதூஉங கருததிற் பதித தல வேணடும.

## 3. பொருளிலக்கணச் சிறப்பு

சஙக காலக் கலவிக்கும ஏனைப் பிறகாலக கல்விக குமம், தமிழ நாட்டுக் கல்விக்கும ஏனைப் பிறநாட்டுக் கல்விக்கும ஏதும் மாறுபாடுளவாதல், இந் நுணணிய அடிப்படையின் வழுவினுலான விளைவேயலலது வேறில் லையென்க. இம முறைமைகளால, ஆசிரியர் தொல காப்பியனூர்தம அகம புறமென்னுங் கலவி முறையும், அகததில இன்பம் ஒன்றுமே யடஙகப் புறத்தில் அற மும பொருளும அவ்வறததின் பயனுன வீடும என மூன்று பகுதிகளடஙகும் விரிவும, அதனுல் அவர்தம் பொருளிலக்கணத்தின் முதனமையும, அப பொருளிலக் கண அமைப்பைத் தனக்கே உரியதாகக் கொண்டு தனிசசுடா விரிக்குந் தமிழ மொழியின் மாட்சியுமெல் லாம ஒருங்கினிது விளஙகாநிறகும.

'கலித்தொகை' யென்னும் அழகிய செந்தமிழ் அகப்பொருணூலில், தன் கணவனைப் பிரிந்த நங்கை யொருத்தி மாலைப்பொழுதுகண்டு ஆற்றுமை மேலிட்டு அப் பொழுதினியல்பைக் கூற்றுவனியல்போடு சார்த்தி வெறுத்துரைப்பதாக ஒரு செய்யுள் வந்துள்ளது. அதன்கண், இக் கருத்தைத் யுரைக்கும் அகப்பகுதி,

" வாலிழை மகளிர் உயிர்ப்பொதி யவிழ்க்குங்
காலை யாவ தறியார்
மாலை யென்மனார் மயங்கி யோரே."

என மூன்றே வரிகளில் யாக்கப்பட்டிருக்கின்றது. ஆனால், அந் நங்கைக்கு இவ்வுணர்ச்சியை விளைத்தூட்டிய மாலைக் காலத்தின் புறத்தியல்புகளோவெனின், இவ் வகப்பகுதியினும் ஏறக்குறைய ஐம்மடங்கு விரிவுடையதாய்,

" அகலாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாகப்
பகலுநுங்கி யதுபோலப் படுசுடர் கல்சேர
இகலமிகு நேமியான் நிறம்போல இருளிவர
நிலவுக்காண் பதுபோல அணிமதி யேதரக்
கண்பாயல் பெற்றபோல் கணைக்கால மலர்கூம்பத்
தம்புகழ் கேட்டார்போல் தலைசாய்த்து மரந்துஞ்ச
முறுவல்கொள் பவைபோல முகையவிழ்பு புதனந்தச
சிறுவெதிரங் குழல்போலச் சுரும்பிமிர்ந் திம்மெனப்
பறவைதம் பார்ப்புள்ளக் கறவைதம் பதிவயிற்
கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர
மாவதி சேர மாலை வாள்கொள
அந்தி யந்தணர் எதிர்கொள அயர்ந்து
செந்தீச் செவ்வழல் தொடங்க வந்ததை"

என அதனகண விளககபபடடிருக்கினறது. அங்ஙனம் விளககிய விடததும, அம மாலைக் காலையில் நிகழும் உயிாப்புளள நிகழ்சசிகள் பலவும ஒருங்கெடுத்து விதநது விரிததிருககும அருமையும முறைமையும் எத் துணை உயிாக களையும இயலபூககும வாயந்து உருகிய உள்ளுணர்வை உருவாகக வலலதாயத திகழகினறது! பொருளிலக்கணம வலலாா இச செயயுளை நோககின, அவாககு இது வழஙகுங கிளாசசியும இன்பமும மிகப் பெரிது!

ஆசிரியர் தொலகாபபியனாா நுவனறவாறு, இவ் விழுமிய செய்யுள, முதல கரு உரிபபொருள்களென னும் அகமும புறமுமான இயறகை முறையிலேயே யாக்கப்படடிருககின்றது. முதற்பொரு ளெனபது நில மும பொழுதுமாகும. இஙகே மாலைககாலம நுவலப படுதலால், அது சிறததறகுரிய முலலை நில நிகழசசிகள் விளககபபடுகினறன. செயயுளின முதலிலேயே இம் முதறபொருளின விளககமாகிய மாலைப்பொழுது முத லியன, நானகு வரிகளில நலமபெற இசைக்கப்பட் டிருததல காணக. அதனபின அந நிலமும பொழுதுங காரணமாகக் கருககொண டெழூஉங கருப்பொருள் விளககஙகள் நிரலே எழிலுறுததி மொழியப்படடிருக கினறன. கருபபொருள வகைகளில்,ஈண்டு ஓரறிவு உயிா முதல் ஆறறிவு உயிர்கள் வரையில மரம புதல சுரும்பு பறவை கறவை மா அநதணர் மகளிா எனப பலவகை உயிர்கள் முறையே எதிாநது வநதுளளன. இவற்றுள, ஒவ்வொனறன சிறபபியலபும உணர்சசிபெருகக கிளங்

தோதப்பட்டிருக்கும் கருத்தழகு உள்ளத்தை மிகவுங் கவர்ந்து நிற்கின்றது. இங்ஙனம் முதற் பொருளுங் கருப்பொருளுமாகிய புறப்பொருள்கள் அவ்வவற்றின் இயல்பு தோன்ற விரிவாகவும் விளக்கமாகவும் உணர் வெதிர உரைக்கப்பட்ட பின்னரே, முதலில் எடுத்துக் காட்டிய மூன்று வரிக்கண் அடங்கிய பிரிவாற்றமை யின் இரக்கவுணர்வாகிய உரிப்பொருளென்னும் அகப் பொருட்பகுதி சுருக்கமாகவும் பிழிவாகவும் உருக்கம் முதிர யாத்துக் கோத்து, இச் செய்யுள் முடிக்கப்பட் டிருக்கின்றது. என இச் செய்யுட்கட் போந்த பொருளி லக்கண அமைப்பினை உற்றுநோக்குங்கால், பண்டைச் சங்ககாலக் கல்வி முறையின் இயற்கை மாட்சியும் ஆட் சியும் இனிது விளங்குகின்றனவன்றோ!

இனி, இச்செய்யுளில், 'இகல்மிகு நேமியான் நிறம் போல இருள் இவர' எனவும், 'தம் புகழ் கேட்டார் போல தலைசாய்த்து மரம் துஞ்ச' எனவும், 'அந்தி அந் தணர் எதிர்கொள்ள அயர்ந்து செந்தீச் செவ்வழல் தொடங்க' எனவுமெல்லாம் வருகின்ற பகுதிகள், புறத்தே பலவகையான பொருளியற்கைகளைப் பயின் றுய்ந்து புலமை காணும் பொழுதே, அகனுணர்விற் றெளிவுண்டாம்படி உணர்ந்துணர்ந்துக் கல்விக் கற்று உணர் வாழ்ந்து கொள்ளும் அக்காலக் கலைபயில் முறையையுந் தெற்றெனப் புலப்படுத்துதல் உற்றறியற்பாற்று. இங்ங னம் மேலெடுத்துக் காட்டிய இக் கலித்தொகைச் செய்யு ளொப்பவே, பத்துப்பாட்டு முழுவதூஉம் எட்டுத் தொகை முழுவதூஉம் பிறவுமெல்லாம், உலகியற்கை

உளளியறகைகளெனப புறமும அகமுமாக முறையே விரியப் பயினறும் பிழியத் தெளிநதும புலமைக-கலை யோடு யாக்கப்பட்டிருநததலை, அவைதமமை ஒருமுறை மேற்போககாகக் காணலுறுவாரும அறிநதுகொளளவர்.

## 4. நடை நலன்

இனி, இப் பணடைககாலக கலவி முறையில், நமம னோர் அறிநதுகொளளவேணடும நுணபொருளுண்மை யும மறறொன் றுள்ளது புறததே விரியபபயின்று பொரு ளியறகைகளைத தெரிநதுகோடலானும, அஙஙனந தெரிநதுகொளளுமபோழதே அகததே ஆழ வுணர்நது உணர்வியறகைகளையுந தெளிநதுகோடலானும உல கியல அருளியலறிவுகளெலலாம் புலவன்மார் ஒருங கெய்தப பெறுதலின, அவரதுளளம உணமை அருள விளக்கததுக் கிடமாகி, அஙஙனம ஆகுதலால் யாவர்க கும மதுரம பயகக ஒழுகலும் உரையாடலுமாகிய பெருந்திறனைப் பெறுகினறது. இதனாற, றாம நல்லொ ழுககங காண்டலும, பிறாக்கு உறுதிபயபபன செவி யறிவுறுததலும அவர் வலலராகினறனர். இந் நிலையில் அவர்ககு இயலபாகவும இனிதாகவுஞ் செயயுளஇசைக கும விழுபபேறும, நடையழகும, நாநலனும் மேனமேற கனிநது கனிநதெழலும், அவர முடிவிற பொயயாச் செவ்வறிவுத தெயவப் பெற்றியராய உணர்வாட்சியின் பேரெலலை யெயதி அருளாடசியிற றலைப்படுவாராகின் றனர்.

பின்னர் அவர், புறத்தே நோக்குந்தோறும், அவர்க்கு இடையறாது உள்ளொளி சுரந்தெழீஇ விரிந்து பாய்த லின், புறப்பொருள்களின் மெய்த் தெளிவும், யாவரும் யாதுந் தம் வயமாகும் பேராற்றலுந் தாமே முயற்சி யின்றி நிகழ்ந்து செல்கின்றன. புலவர்தம் இவ் விழு மிய நிலையிலன்றோ,

" மயிலியன் மாஞேக்கிற
கிளிமழலை மென்சாயலோர்
வளிநுழையும் வாய்பொருந்தி "

எனவும்,

" குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறு வியலாவணத்து "

எனவும்,

" மலைத்தலைய கடற்காவிரி
புனல் பரந்து பொன்கொழிக்கும்
விளைவறு வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
தீத்தெறுவிற் கவினவாடி
நீர்ச்செறுவி னீள்நெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கட்
காய்ச்செந்நெற் கதிரருந்தி
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழற் றுயில்வதியும் "

எனவும்,

" அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ் "

"புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்
ஆரா வியற்கை யவாநீப்பின் அந்நிலையே
பேரா வியற்கை தரும்"

எனவும்,

"யாரொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை,
என்வாயச் சொல்லும் அன்ன; ஒன்னா
கடிமதில் அரணபல கடந்த
நெடுமா னஞ்சி! நீ அருளன் மாறே"

எனவுமெல்லாம் இயலுழுகும் பொருளழுகும், அவை தம்மின இயற்கைவழி யெழூஉம நடையழகும் உணர் வழகும பழுத்தொழுகுஞ், சுவை கனிநத தெளிதமிழத் தொடர்கள் அவாபால எழாநிற்கும! உள்ளத்தே தெளிவுங கனிவுமின்றிப புறத்தே நாநலனும் நடைநல னும எவ்வாறு சுரந்துவரும?

சஙககாலத் திருநத இக் கலவிமுறை பிறகாலததே நிலைமாறிச் சிதைநதமையாலன்றோ, பொருள்வழிச சொறபரந்து கனியும் இவ் விழுநிலை பழுதாகிப,பொருட் சிறப்பின முதன்மை கருதாது வெறுஞ் சொல்லார வாரநிலை நிறைந்து பெருகி, அதனால அச் சொறசுவை தானுங குன்றி, உணாவை எவவகையானும் **மெய்ம்மை யிற்** செலுததி இன்புறுத்த மாட்டாது, நம அமிழ்தனன தெளிதமிழக்கு இழுககமுண்டாயிறறு! ஆறற சஙக

இலககியங்களிலோ, * "மாம்பழசசாறு பெய்த குடுவை யின் எப்பக்கத்தே பொத்திட்டு நாவை நீட்டினும அதன வழியே யொழுகும அச சாறு தித்திததல்போல,...எவ் விடததே அறிவு தோயினும ஆண்டு இனிமையே விளையாநிற்கின்றது...ஒவ்வொரு சொலலும பொருட கரு நிரம்பிக கொழுந தீயிற றெறிதத பொறிபோல நம அறிவைக் கொளுத்திப பல பொருட்டோறறங காட்டி விளஙகுகின்றன." அல்லாமலும, அநநிலையே பேரா இயறகைதரும ஆராமை பயந்து, கற்றதனுலாய பெரும பயனையும அந நூற கலவி எயதுவிககினறதெனக.

---

* ஆசிரியா மறைமலையடிகள் உரைநடை.

## ௪. பழக்கம்

பொதுவாகப், 'பழக்கம்' 'வழக்கம்' 'ஒழுக்கம்' என்பன ஒன்றையொன்று பற்றும் இயல்பினவாய்ப் பலர்க்கும் மருட்சி விளைத்தலின், 'உணவு' 'உடை' 'கலவி' என்னும் முதன் மூன்று கட்டுரைகளை யடுத்து, இவை தனித்தனியே ஆராய்ந்து எடுத்துக்கொள்ளப் பட்டன. 'வழக்கம்' 'ஒழுக்கம்' என்பன ஏனை வேறிரண்டு கட்டுரைகளால் முறையே விளக்கப்படுமாகலின், ஈண்டுப் 'பழக்கம்' என்னும் பொருள்பற்றிச் சிற்சில வகுந்து கருதலாம்.

### 1. பழக்கத்தின் தகுதி

'பழக்கம்' என்னும் மொழி 'பயிற்சியின் முதிர்ச்சி' யென்னும் பொருட்டு. "நவிறொறும் நூல் நயம் போலும் **பயிறொறும்**, பண்புடையாளர் தொடர்பு" என்னுந் தெய்வக் குறண்மொழியில் இச் சொற்பொருள் வழக்கின் இயைபும் இனிமையும் நயனும் நன்கு விளங்குகின்றன. பயிறலென்றலும் 'நெருங்கி உணர்வுகொள்ள' லெனும் பொருள் செய்தலின், 'பயிறொறும்' என்னும் மொழிக்கு ஆண்டு உரை நுவலும் **பரிமேலழகர்** "பயிலுந் தோறும் அவர்க்கின்பஞ் செய்தல" என உணர்வொடு படுத்து அதனை உரையாநிற்பர். ஆதலின், நினைதலாயினுஞ் சொல்லலாயினுஞ் செய்தலாயினும் **நெருங்கி உணர்வுதோய்ந்து நயப்படும் முற்றிய இயல்பே பழக்கம் ஆம்** என நுண்ணிதிற் றெளிந்துகொள்ளப்படும்.

பயிற்சி முற்றி இங்ஙனம் பழக்கமாய உணர்விற் சென்று வீங்கலும், அதனால் அது செயல் சொல் நினை

வுகளெலலாம முறை முறையே ஊடுருவிக கதுவலும ஓஙகலும உரையாசிரியர் பரிமேலழகர் "புணர்சசி பழகுதல" என்னும பிறிதொரு திருககுறண் மணியின பொருள்விளக்கததிற, "பழகுதல, பலகாற் கணடுஞ் சொலலாடியும மருவுதல" எனவும, "நட்பிறகுப் புணர்ச்சி, பழகுதல, உணர்சசியொததல எனனுங காரணம் மூனறு" எனவும முறையே ஒனறினொன றேதுவாயப் பொஙகிச் செல்ல வைத்து நன்கு விளக்குதலா றேற்றமாம.

பழக்கமெனபது இததுணை உணர்வு கதுவிச் சேற லானன்றே, அதன்கண், மிக விழிப்பாய ஒழுகலவேண்டு மெனற்கு,

"ஆயநதாயந்து கொளளதான கேணமை கடைமுறை
தான்சாந் துயரந தரும"

எனத திருவள்ளுவர் இரஙகி அறிவு கொளுததுவாரா யினா! நரிவெரூஉத்தலையார் எனனும மறறொரு பழந தமிழப் புலவா,

"அருளும் அன்பும நீககி, நீஙகா
நிரயங கொள்பவரொ டொன்றுது காவல
குழவி கொள்பவரின் ஓமபுமதி;
அளிதோதானே அது பெறலருங் குரைததே"

எனப் பழக்கம் தீயதாயின, அஃது உயிருணர்வினிற புற்று வைத்து, அருள அனபு முதலிய இருவகை அற வுணர்வுகளையும பொன்றக கெடுத்து அதனவழி ஏனை அறச்செயல்களையெல்லாம ஒருங்கொழியச செய்து

நீஙகாத தீவாய நரகுககும இரையாககிவிடும பெறறி தேறறிச் சேரமான கருவூரே றிய ஔவாடகோப் பெருஞ் சேர லிரும்பொறைக்குச் செவியறிவுறுத்துதலுங காணக.

ஆனல அப பழககம் விழுமிதாகமட்டும நிகழ்நது முறறுவதாயின, அது தரும் பயனும பேறும இனப முமஉரைகொணடு மொழியலுறும வரைநிலையுடையன அலல. சானறேர் அதன உரைகொளு மாட்சி கருதியே ஒல்வழி உணாதத முயலகுவாா, அதனை 'விழை தகைமை' எனவும், 'கெழுதகைமை' எனவும, 'பெருங கிழமை' யெனவும அழகொழுகு மொழிகளால இசைத துரைததும உளளம நிரமபாராயினா! நிரமபா ரானமை, அவா மேலுமேலும ஆறு உணர்வினராயப் 'பழகிய நட' பெனவும, 'வழிவநத கேணமை' யென வும, 'கிழமை போழாப பழைமை' யெனவுங கிளந தோதிச செலலுதலின வைததுத் தெளியப்படுகினறது

சொலலுஞ் செயலும் உணர்வும ஒருஙகே தன்கண் ஈாககவல்லதும, அவை ஒனறி நிகழுமாறு செயயவலல தும், அவறறில நாளுககு நாள் எளிமை யுணடாக்கி முயறசியறற இயறகைவாழவில இருததவலலதும, இவ் வாறருல், துயப்பதெதனையுந திருநதத் துய்ப்பிதது மேலுககுமேற றெளிவு கொளுத்தவல்லதுமான பெருங் கருவியாய இப பழக்கம எனனும் இயலபு இங்ஙனஞ் செயகை செயது போதரலின, வாழககையிற குழவிப பருவம முதல இது மிகக இனறியமையாத தொனறுயக கருதறகுரியதாயிருககின்றது! பழககததின இவ்விழுப்ப மெல்லாம நம முன்னோர் நுணுகி யறிநதிருநதமை

யானனறே, அவரதனே, 'விருமபத் தகுநத இயலபு' 'தழுவுதறகேறற தகைமை' 'எஞ்ஞானறும நிலைபெறும உரிமை' எனவும, 'உயிரோடியலுறுந தொடர்பு' 'முறையாற செறிவுறும ஆறறல,' 'இறவாத திருவளா ஆககம' எனவுமெலலாம மேலெடுத்துக காட்டிய 'விழைதகைமை' முதலிய செழுந தமிழகளால மாட்சி தோனறத தெருட்டலானா!

பழககம எனபது இததுணே இயலுரிமை கெழீஇய தாயின, மககளுயிாககு ஈதனறே எனறும உரிய வழித்துணேயாவது! இளநதைப பருவமுதல் இறககும பொழுது வரை அவரவருந தத்தம நினேவு சொற செயலகளாற பழகும பழககஙகளே, வாழக்கையில் அவ ரவர் இம்மை மறுமைப் பேறுகளே விதிததியககும விணே களாய் யாணடுங கருககொணடெதிர்தலே அறியாதார் யாா? பெணடிரும மைநதரும பிறரும என அனைவரும ஒருஙகே இரஙகிக கைவிட்டு விட்ட கடைபபொழுதில, யாருந துணேயின்றித தனிதது அலமருஙகால, அது காறும அவரவருஞ் செயதுபோநத பழககச செயல களின பாலவகை யொன்றே உயிாககு உறறதுணேயாய் எககாலும நிலேபிரியா இயலுணாவாய் உணமையுந தெயவமுமாய நினறு, இனபமும அமைதியும பயந்து அவ்வுயிரை நடாததுதல நினேய நினேய, இப பழககத் தின விழுபபம எவாககும நனகு விளஙகறபாலதே யாம். உயிாகளின தொனறுதொட்ட முதற பிறவியி லிருந்தே இப் பழககமானது அருமபி, உறுதுணேயாய்ப் பிறவிதோறுந தொடாநது போந்து மேனமேலும நல்

லறிவு நன்முயற்சிகட்கு வாய்ப்பும் வழியுங் கோலி மாட்சிமை விளைத்துவரும் இயலாற்றலை உள்ளுங்கால், மாந்தராவார் இதன் திறத்தில் எத்துணை ஊக்கமும் முயற்சியும் உறுதியும் விழிப்பு முடையராய் ஒழுக வேண்டுமென்பது விளங்காமற்போகாது !

மேலும், உயிர்கள் பிறவி யெடுத்தலின் நோக்க மாகிய அறிவு அன்பு அருள் முதலிய ஒளிவிளக்கப் பேற்றுக்குப், பழக்கம் ஒன்றே கைக்கண்ட மணிவிளக் காய,அறியாமை வன்பு மருள் முதலிய வல்லிருட்பெருக் கைச் சீய்த்துத் துலக்கும் ஒப்பற்ற கருவியாதலும் அறி தலவேண்டும். இதனை விளக்கிக் காட்டுமிடத்து, மழை நீர் பெய்து நிலம் ஈரிதாயிருக்குங் காலையில் ஊக்கமும் முயற்சியும் மிக்க உழவன் தனது நாஞ்சிலை அதன்கண் இரீஇப் பகடுகள் பூட்டி இழுப்பிக்க அஃது அந் நிலத்தைப் பிளந்துழுது பதஞ்செய்தல் போலவும், நீலப் பாய லொத்த அகன்ற பெருங்கடலில் நாற்புறமும் செறிந்து செறிந்தலையும் அலைச்சுருளில் யாண்டுங் கரைகாணு மீகா மன் தனது கப்பலை இயக்கிச் செலலுங்கால அஃது அவ் வலைநீரை இருபிளவாக்கக் கிழித்துச்சேறல் ஒப்பவும்,கரு முகிற்குழாம் வானகவிந்து குமுறி நெடுமழை பெய்யும் நள்ளிராக்காலத்தே எங்கும் இருட்டிக் கிடக்கும் உவாக் கருக்கலில் ஒரு பெரிய மின்னொளிப் பிழம்பு வளைந்து வளைந்து வான்போழ்ந்து மிளிரல் நிகரவும், காடும் மலையுங் கடலுங் களருமென யாங்கும் புதலுந் தூறும் பொழிலும் மரமுமாய் மண்டிச் செறிந்து பின் னிப் படர்ந்திருக்கும் இந் நிலவுலகில், பல மதாதத கடாக்

களிறுகள ஒருஙகு திரணடோடிஞலனன பேராறறல மிகக தொரு பெரிய புபற காறறுனது அணைததினூடும ஊடுருவி அடர்ததல பொருவவும பழககம எனனும் ஒவ்வொரு பயிறசியும மாநதரின அறியாமை மருட் செறிவை எதிரேறிக கலைதது விலககுவதாயிருககினற தெனக.

## 2. பயிறலின் மேன்மை

மககள ஏதொனறனையும பழகுஙகால முதலில அவாக்கது, மிகக அறிவு முயறசியையும உழைபபையும உணடாககி அவரை அத துறைக்கட் டிருகியேற விடுக கினறது. அதனுற பயிறசியாளர்கு அநநிலையில அறிவு மிக முனைநது நினறு, கொலல னுலைககட சுடாநதெரியுந தீககொழுநது போலக் கதிாகானறு விளஙகி, மேலுககு மேல மாடசிமைபபடடு வருகினறது. உணமையாயப பயிலலுறுவார்கு அப பயிறசியானது இஙஙனம அறிவு வளாசசியும இனபமும நிலைககு நிலை மிகுத்து வரலா னனறே,

"கருத்துணர்நது கற்றறிநதார் கேணமையெஞ் ஞானறுங
குருத்திற கரும்புதின றற்றே"

என வளாசசி நிலைக்கண் வைதது **நாலடியார்த் திரு மொழியும** நவிலாநினறது!

பயிறசி முதிர்ச்சியடையுங்காறும அறிவு இஙங னஞ் சுடர்கிளர்நது வளாச்சியடைந்து வரலின, முதிர்சசி யடைநதபின் அவ்வறிவுநிலை உடனே உணர்வு நிலையைக்

கிளர்நதெழச செயது தான அதனகண ஒன்றிபபோக, உணாவுநிலையானது அதனமேல விரிநதெழீஇ மாந்தரை இனபப பெயலிற குளிர்விததுத தனகண நிலைபெறுத்தி மகிழவூட்டி வரும. ஆதலால, அறிவும இனபமும் விருமபுவோரனைவாககும அவரவர்ககியன்ற துறையி னெலலாம பயிறசியும அதன முதிாசசியுமாகிய பழக் கம இனறியமையாததொன்ருயக கருதபபடுமெனபது இவவாறருன இனிது விளஙகாநிறகுமென்க.

இவ் வுணமைகள மககளுளளஙகளில இனிது நிலை பெறுமாயின, அவரெலலாம, தம வாழககையில் இயல பாக நேரும எததனையோ வகையான எழிலருமபும வாய்பபுககளை மிகக ஆாவததுடன பரிநதேறறுக், கல வியே கைததொழிலே செய்தவமே யெனத தாம ஏற றது எவ்வகைத துறையதாயினும அதனை அறிவும் உணாவுஞ் சுடாநதினபுறும வகையில அழகாகப் பயினறு பயினறு தேறி மேலோஙகலிற பினவாங்காா. வாழவது எனபதும் வாழ்ககை யெனபதும் ஈதன்றே! செய்வது எனபதுஞ செயறகை யெனபதும இஃதனறி வேறியாது? தகுதி யெனபதுந தகைமை யெனபதும மாநதாககு மறறும உணடுகொல!

"அறனகடைப் படாஅ வாழக்கையும"

"செயறகரிய செய்வா பெரியர்"

"தகுதியும் வழக்குந் தழீஇயின ஒழுகும"

என வருஉம அகநானூறு, திருக்குறள், தொல்காப்பியம் எனனும பழமபெருஞ செநதமிழ நாலுரைகளாலெல்

லாம் முறையே இவ்வுண்மைகள் விளங்கவல்லும். ஈண் டெடுத்துக் காட்டிய இம் மூவகை அமிழ்த மொழிகளி லும், பயிற்சியின் முனைப்பும் உழைப்பும் விழிப்பும் ஊடு நிழலாடிக்கொண் டிருத்தல் காண்க. அறிவும் அறமும் அன்பும் இடையறாது மின்னி விளங்கியபடியாய்ச் சுட ரோடிக்கொண் டிருத்தலுங் கண்டுகொள்க. அறம் என் பது தீது நீக்கும் பயிற்சி; செயல் என்பது ஆக்கம் பெருக்கும் முயற்சி; தகுதி யென்பது பயன் கண்டு மிகுக்கும் பழக்கமாம். மாந்தர்க்கு இப் பழக்கம் ஒன் றில்லையேல், 'செயற்கை' 'ஊழ்' 'அறம்' 'தவம்' 'அறத்தாறு' 'தெய்வம்' 'அறனுக்கம்' 'வாழ்க்கை' 'தகுதி' 'சான்றாண்மை' 'நல்லாறு' 'துப்புரவு' 'நோற்றல்' 'பற்றறல்' 'தூய்மை' 'மெய்ப்பொருள்' 'தெளிவு' 'செம்பொருள்' 'பேராவியற்கை' முதலிய விலைமதிக்கொணு மணிமொழி வழக்கெலாம் நூல்களில் வந்தெய்துதற்கு வாயிலேது?

**ஆசிரியர் தொல்காப்பியனுர்**, அறிவுச் சுடரொடு திரி தரும் இச் செயற்கைப் பயிற்சியின் இயைபைத், '**தகுதி**' யென்னுங் குறியீடு கொடுத்து அறிவுறுத்தலில் எத் தனையோ உண்மைகள் ஒளிறிக் கதிர்காலுகின்றன. 'தகுதி' யென்னும் அச் செஞ்சாறு நிரம்பிய மொழியே தனியியல்பில், 'ஒளிப்பேறு' என்னும் பொருட்டாம். அதனை விதந்தோதின், 'செயற்கைப் பயிற்சி வயத் தான், ஓர் உயிர் எய்திநிற்கும் ஆற்றல் வாய்ந்த ஒளி நிலை' என்று கிளந்திசைக்கலாம். இதனானன்றே அவ் வொரு மொழியே, தமிழ் வழக்கிற, 'பழக்கம்' 'அறிவு

'அறம' 'ஆறறல' 'ஒலிக்குறிபபு' 'ஒளிககுறிப்பு' 'மேனமை' 'நிலைபேறு' 'மெனமை' 'இணக்கம்' 'அடககம்' 'நடுவுநிலை' 'இதய நடு' 'தெளிவு' 'அனபு' 'அருள' 'கனிவு' முதலிய பேராற்றற பண புகளான ஒண்மைக குறிபபுக்களினெலலாம வழங்கி வருகினறது! சுருஙக உரைககின, ஞாயிறெுத்த வலி யும், செநதியொதத தெறலும, திஙகளொதத அளியு மென எவ்வகைப்பட்ட ஆறறலுந தகுதிககண அடங் கிப், பழககததாற றுலஙகுவனவேயாம எனக,

தமிழ இலககண மரபில ஆசிரியா 'தகுதி வழக்கு' எனச செயறகைப பழககததாலுன நறகுறிப்பொன்றை மிகப் பழைய காலநதொட்டே வழங்கி வருகின்றன ரெனபது **தொல்காப்பிய** நூறபாககளில் வருங் குறிப் புக்களால நன்கு புலனுகினறது. உரையாசிரியர் **இளம் பூரணர்** அவ் வழக்குககு உரை நவிலுஙகால், 'மஙகலம' 'இடககரடககல' 'குழூஉககுறி' என அது மூவகைப் படுமாறறை இனிது விளக்கியிருக்கினறனர். இம் மூன்றும பண்டுதொட்டே 'தகுதி' எனக் கருதப்பட்டு வந்த அழகும அருமையும, நமதுளளத்தைப் பெரிதுங் கவாநது, நம முற்காலப பெரியோர்தங் திறவிதான செமபுலததையுஞ் செமமனததையும விளங்கப் புலப படுதது இனபுறுததுகினறன. இவறறுட், 'குழூஉக் குறி' எனபது வலியும, 'இடககரடககல்' என்பது தெறலும, 'மஙகலம்' என்பது அளியுமான மூவகைத் தகுதிகளாதல சிறிதே கூர்ந்து நோக்குவாரெவரும் அறிய லுறுவனவாம. மேலும இவை, செயறறிறமைக்கும்,

சொலலமைவுக்கும், நினைவினினிமைககும முறையே ஏதுவாதலும பின்னுஞ சறறு உறறுணர்வாரெவரும உணரறபாலனவாகும். நம முனனோாதம பழக்க முறைமையும் , அதனால தம நினைவு சொற செயலகளை அவா அளியுந் தெறலும் ஆறறலும வயங்கப பயிறல தழீஇத, தந் நிலைக்கண நின்று, உலகில் வழககஙகளும ஒழுககஙகளுந் தோனறி நிகழறகு வரமபானவராய ஓங்கிக், குணமெனனுங குனறேறி மிளிாநத மாண்பும பெருந்தகவும் என்றும எவராலும பின்பறறறபாலன வாயிருத்தல் சறறும் மறககொணுததெனக.

## 3. மனப் பழக்கம்

பணடைக் காலததில விளஙகிய நம பெருமக்களின உளளம மங்கலமரபினையே **நினைந்து பழகு**வதாய வீறு பெறறிருந்தது. இந் நினைவுப பயிறசியால் அவரும அவா மரபினராய வழிவழி வருஉந தமிழ் மககளும ஏனையோரும் பெற்றதும பெறறுவருவதுமான அழியாப் பெருவிளககங்களை எஙஙனம உரைகொணடு ஒரு நாவாற கூறலியலும! நிலையாமையுந தீமையுமாகிய பொய்மையையே தனது பொருட்கூறுவுடைய இம் மாய உலகு முழுவதூஉம், அழியாமையும நனமையுமாகிய மெயமமை எனனும் அருட்கூறு அமைந்த எழில மலாசசி யையே பணடைத தமிழா் தம் உளளத்தே பகுத துணர்ந்து காண முயனறு, பழகி, அந நிலையில் இணை யற்ற தேர்ச்சியடைநது, மஙகல மரபினராய்த துலஙகி ஞா. ‘முடங்கல’ எனனும ‘ஓலை’யை வாளா உலாந்து ஒடிநது இறறொழியும் வெறறுபபொருளாகக கருதாது,

அதனில, எழுதியோர் திருமுகவுணர்ச்சியின் மங்கல எழிலேயே கணடு 'திருமுகம' என வழங்கி வந்தன ராயின, அதறகு எத்தனை இனிய உள்ளப்பாங்கு வேணடும்! இதனுல அவர், துனபத்தையும் இன்பமாக் காணவும அவவினபததையும இகநது உரையுணர்வறற உயர்நத அமைதியினிற பேராது வைகவும வலலராய்த தெளிநது விளஙகினர். நினையினும மனமெலாந திததிக கும இவ் விழுமிய உளளப பழககததில் முறகாலச் சானறேர் எததுணைச செவ்விதாயத தேறிச சிறந திருநதன ரெனறறகு,

"எப்பொருள எத்தனமைதத தாயினும அபபொருள்
மெயபபொருள் காண்ப தறிவு"

"இருள்நீங்கி இன்பம் பயககும மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

"ஆரா வியற்கை அவாநீப்பின் அநநிலையே
பேரா வியற்கை தரும"

என்னுந் தநநிகரறற அருளெழிற கொழுநதுகளான செயய பொய்யா மொழிகளே போதுமான சான்றுகு மன்றே! யாணடும நலமே காணும இததகைய விழு மிய மஙகல நினைவன்றே, உவரும புலவும் நிறைநத கடலையும, மணணினுந தீயினுந திரிந்த பொருள்களின் உருவான குடையையுங் கணடவிடத்து,

"நன்னித திலத்தின் பூணணிந்து
நலஞ்சார் பவளக் கலையுடுத்துச்
செநநெற் பழனக் கழனிதொறுந்
திரையு லாவு கடற்சேர்ப்ப"

எனனுஞ சிலப்பதிகாரத் திருமொழியும,

" கண்பொர விளஙகுநின் விண்பொரு வியன்குடை
வெயினமறைக் கொண்டன்ருே அன்றே ; வருந்திய
குடிமறைப் பதுவே கூாவேல வளவ ! "

என்னும புறநானூற்றுப் பொருணமொழியும போனற பொருளெழிலும உணர்வெழிலுங கனிந்தொழுகா நிறகுஞ செய்யுளெழிலை எழுசசெய்தது !

## 4 சொற் பழக்கம்

இனிப், பணடைத தமிழர்தஞ் சொற் பழக்கமாகிய 'இடககரடக்கல்' எனனுஞ் சொனமஙகலங கருதற் பாறறு. இது தெறலின்பாற படுமென்பது முன்னுங் குறிபபிடப்பட்டது. சொறகள் பெரும்பாலும கருத துக்களைப் பிறர்க்குப் புலப்படுதத உதவுகினறன. அவற றுள்ளும, ஒருவரோடொருவர் அளவளாவி உரைககுஞ சொறகளே மிக்க ஆறறல வாய்நதவை ; அளவளாவு வோா நண்பரெனபபடுவர். அவர் உரைததற்குரியன நகுமொழிகளல்லன வென்பதும் மிகுதிககண் மேற் சென்று இடிததனமொழிகளேயா மென்பதும அனை வரும அறிநதனவேயாம். எததகைய நட்பு மேற் கொளளத தக்கதென ஆராயும 'நட்பாராயதல' என னும் பகுதியில், நணபர்க்குரிய ஒரே சொறறுணடாகத திருவள்ளுவனர்,

" அழச்சொலலி அலல திடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்நது கொளல "

என அருளிச்செய திருககுறம வாய்மையை உற்று நோக்கின, 'சொல்லின பயன் இத தெறலேகொல்' என்னும் வியப்பு எவர்க்குந தோனறுமலிராது. சொல் வன்மையை ஆசிரியர் அமைச்சு, தூது முதலியோர் மருஙகுணரவைதது வலலாங்கு விளககுமிடனெல்லாம் இடக்கரை வல்லவாறடககி, வழங்குதறகண் அவரை இனியராச செயதுகோடலான இவ் வடக்கியல் மாணபே நனகு புலனுகினறது.

ஆசிரியா தொலகாப்பியனுா, இச் சொன்மஙக லததை 'வாழத்து' 'அறிவுறூஉ' வென இருவகைக் கண அடககி உணரவைப்பர். வாழத்தெனபது இயல்பு நுவலல; அறிவுறூஉவென்பது அவ்வியல்பு நுவலு மாறறுல அறிதறகுரியன அறிவுறீஇத தீதுசெறுத்து நனனெறி நிறுததலாம. இவ்வாறறுல், வாழ்ததென் பதும அறிவுறுததுதறகேதுவாகலின, அதூஉம் அறிவு றூஉவில அடஙகுமென்க. இஙஙனம வாழதது தலும அடக்கியலாதல், "அவையடக்கியல — அவையை வாழ்த்துதல" எனப **பேராசிரியர்** உரைககுமாறறுனும ஆசிரியர் தொல்காப்பியனுரே அறிவுறூஉ மொழியை, 'வாயுறை வாழ்த்' தெனக குறிகௌததலானும் உணரப் படும். இவவாற்றுல, வாழ்த்தெனனும புகழ்மொழி யும அறிவுறூஉவில இயையச், சொலலாடற செயல் பொதுவாகத தீது செறுக்கும அறிவுரைககண்ணதே யாதல் தெற்றெனத் தெளியபபடுமனறே! இச் சொற் றெணடினையும் ஆசிரியா 'வாயுறை வாழ்த்து' 'அவை யடக்கியல' 'செவியறிவுறூஉ' என வகுதது,

எனனுந தொல்காப்பியச் செய்யுளிய லுரைகளானும் பெறப்படும. 'அஙகத'க் கிளவிகளின் கருத்தும் ஈதன்றோ!

நட்டார் தவறுடையராயினும அவர் தவற்றை அறக் களைதலே நோக்கமாய், அனபும அறனுங கொண்டு இன்னுரையோ இடித்துரையோ இயலுரையோ நுவன்று போககி, அவரைத தமமுள அடககிககொள்ளும் அழகிய சொறபழககததில முறகாலத் தமிழமககள் மிகத் தேறினோராய்ப் பேராறறலும பேராண்மையும வாயந்து திகழநதமை, தமிழகமே ஒரு பெருஞ சிறபபுரிமையாகக் கொணடு மகிழறபாலதாகும. பணடு சோழன் நலங்கிள்ளி யென்னு மனனன ஒருகால நெடுங்கிள்ளி யென்பானுடன போர தொடுததது அவறகுரிய ஆவூரை முற்றுகை செய்தனன. அஞஞான்று நெடுஙகிள்ளி தனது கோட்டைவாயிலை அடைததுககொணடு உள்ளே இருக்க நோநதது. அதுகணடு, அவனுழையிருநத கோவூர்கிழா ரென்னுஞ செநநாவனமையோா, அவனை நோககி,

> "இன்னு தமம ஈங்கினி திருத்தல ,
> துன்னருந் துபபின் வயமான் தோன்றல !
> அறவை யாயின நினதெனத திறததல ;
> மறவை யாயின் போரொடு திறத்தல் ;
> அறவையும மறவையும அலலை யாகத்
> திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
> நீணமதி லொருசிறை யொடுங்குதல,
> நாணுத்தக வுடைததிது காணுங் காலே"

என அஞசாதும் பொய்யாதும் அறிவுரை நிறீஇத் தெருட்டினர். இச் சொலலருமை எத்துணை மாட்சித்து!

மெய்மையும் அறமும் நுவலும் இனைய இனிய சொற் பழககமனரோ, இறவாத மஙகலத தகுதி வாய்நது எல லோரையுமு இனிது வாழ்விககவலலது !

## 5. செயற் பழக்கம்

இனி, அற்றை நாட பெரியோர்தஞ் செயற் பழக்க முமு ஈண்டுச சிறிது நினைவுகூர்தல வேணடும. செயல எனபது உடமபு கருவியாக நிகழவதாகும. அதனை வகையுறக் கருதின, உடமபென்பது பொதுவாக மெய் வாய் முதலிய ஐவகைப் பொறிகளினகண் அடங்குத லால், செயல் அப் பொறிபுலன்களால நடைபெறுவ தெனத துணிந்துகொளளபபடும. புலன்களோ எனறும் புறபபொருளகளையே நாடிப் பறறும இயல்பின. எனவே, 'செயல்' எனபது 'ஆக்கம் பெருககுமு முயறசி' யாய் நிகழதலும் இயல்பேயாம். செயலாறறலெனபது, காரியததனமையாதலின், அது கருமம் எனவுமு நுவலப் படும. பெரும்பாலுமு அது பல்வகைத தொழிலகளை யுமு அவறறின வாணிகததையுங குறிககும. இவறறின் பயன பொருளாககமெனபது எவருமு அறிநததேயாம. "செயக பொருளை" எனறார் புலவர் திருவள்ளுவனாரும்.

பொருளோ, எவாககுமு நட்டார துணையினறி வாயபபதரிது. அரிதாயினமையாறறான், திருக்குறட் பொருட்பால,நடபுககுமட்டுமு ஏனையனைத்திற்குமு மிகுதி யாகப பதினேழதிகாரஙகள் ஒதுககி நிறீஇப, பறபல வகைகளில் உடனபாட்டானுமு எதிர்மறையானும் அதனை இனிது விளக்கிப் போதநதது. தொழிலும்

வாணிகமும் இதனுனனரே உலகிற சிலரும் பலரும் குழூஉக குழூஉவாயத் தமமுட் கேண்மை கெழீஇ ஆக்க முற நடத்துதல யாணடுங காணபபடுகினறது! ஆத லின் நறபொருள திரட்டலாகிய காரியத்தனமானது தகுதியாக ஆறறலுற்று மஙகல முறைமையின் நடை பெறுவதாயின, முதலிற குழூஉக கொளளலும, பின்னர் அக் குழூஉ வழஙகுதறகேறற குறிகணிறுவல முதலிய வழககுகள அமைததலும, பிறவும அதுதனக்கு இனறி யமையாச் செயகையுறுபபுகளா யிருககினறனவெனக.

நம முனனோர் இச செயற பழககஙகளினெலலாம் நனகு துறைபோயினவரென்பது, 'குழூஉக் குறி' யென ஒரு செயன மஙகலத தகுதியினை, 'இலககணம' என் னும இயலவழக்கின் கொடுமுடியிடததும ஏறி இனிது நிலைகொள்ளலுறுமாறு, பெருக வழஙகிவந திருததலாலும, அதறகுப் பணடுதொட்டே உரையாசிரி யனமார் 'பொற்கொலலா பொனனைப பறி' எனறலும, 'வணணக்கா காணத்தை நீலம' என்றலும் எனத தொழிலவாணிகத் துறைககுரிய பெயாகளையே பெரும பாலும் அக குறிநிலை வழக்குகளாகக காட்டுத் தந்து வரலாலும நனகு விளங்கும.

இனி இப பொருட்செயலும, அறமுந தவமுமான நறபயனமேல வைததே தீதிலா முறைமைகளில அகு ஞானறு செயயபபட்டுவநததமை,

> " அறனீனும் இன்பமு மீனும திறனறிந்து
> தீதின்றி வந்த பொருள் "

"அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியால் உண்டு"

எனனுந் திருமொழிகளாற் பெறப்படுதலின், பொருட்
செயலை ஒரு கருவியாகக் கொண்டு, அறந் தவஞ் செய்
தலையே உடம்பின் முதன்மையான செயற்பழக்கமாக
மேற்கொண்டு முற்காலத் தமிழர் பழகி வந்தன ரென
பதூஉந் தெளிதல்வேண்டும். இதனால், அப் பொருட்
செயல் சிறந்த மங்கலத் தகுதியினை எய்துவதாயிற்று.

அறந் தவஞ் செய்தற்கும், தம்மை நட்பாரும் தம்மால்
நடக்கப்படுவாருமான அறக்குழுவினரும் அவர்க்குரிய
குறிகளும் வேண்டுமெனபதும், பண்டைக் காலத்தில்
இக் குழூஉவுங் குறியும் யாண்டும் வழக்காறுடையன
வென்பதும்,

"எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீர்"

என வரூஉங் **கலித்தொகை** நறுந்தமிழ் முதலிய வழக்
குக்களால் இனிது புலனாகின்றன. இவ்வாற்றால், அறம்
தவம் முதலியன செய்தலே சிறப்பாகச் செய்தல்
எனப்படுமெனபதும், அதுவே மெய்ப்பொருட்செயல்
ஆம் என்பதும் அவர் கருத்தாதல் பெறப்படும். ஈது
தெருட்ட விரும்பிய **பொய்யா மொழியார்**,

"செயற்பால தோரும் அறனே"
"தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார்"

எனச செயற பழககமாகச, சிறககச செயதற்குரியன இவையே எனத் தெளிவிததருளுவாராயினர்.

**பிசிராந்தையா**ரெனனும பெருநதவ முனிவரரின் செயற பழககமும, அததகைய அருளொழுக்கங் கெழீஇய பெரியாரும மிக உருகிய உள்ளுணாவோடு உடனுயிா விடுககும உயிரக காதலராய் மெய்நநேயங கொள்ளுமாறு ஏறற மாடசியுடையனுய நலலறச் செயகைகளொடொழுகிய **கோப்பெருஞ் சோழ**னென்னும நலலொழுககச சானறோனறன செயறபழககமும, அவர் தேர்நதியறறிய விழுமிய தமிழ செய்யுட்களும, பண டைக காலததின செயற பழககஙகட்குச சிறநத எடுத துக காடடுககளாக நினைவுகூர்தல பொருநதும.

“செய்குவங கொலலோ நலவினை யெனவே
ஐயம் அறுஅர் கசடீணடு காடசி
நீஙகா நெஞ்சத்துத துணிவில லோரே”

எனவும,

“செய்வினை மருங்கின எய்தல உண்டெனின்
தொய்யா வுலகதது நுகர்சசியுங கூடும்;
தொயயா வுலகத்து நுகர்சசி இலலெனின்
மாறிப் பிறபபின் இன்மையுங் கூடும ;
மாறிப பிறவா ராயினும் இமயத்துக்
கோடுயர்ந தன்ன தமஇசை நட்டுத்
தீதில யாக்கையொடு மாயதல தவத்தலையே”

எனவுங கோப்பெருஞ சோழன இயறறியிருககும விலை வரமபறற மணிமொழிக குறிபபுக்கள், செய்தல இன்

னதை யெனபதும,அச் செயற பழககததிறகு வேண்டுந் துணிவு இத்தகையதுகொல் எனபதும, பணடைச் சஙக காலத்தில் இனைய செயலாண்மை வீரரும வாழ்நது வயஙகினரன்றே எனபதும இனிது புலப்படுத்தித், தக் காரனைவரும் மெயமையிற பழக எக்காலும வாயில் கோலி விளஙகுதல காணக என்பது.

## ௫. வழக்கம்

உலகத்தில் 'வழக்கம்' என்பது மிக்க ஆற்றல் வாய்ந்ததொன்றாய்க் காணப்படுகின்றது. அதற்குக் காரணம், அஃது இயற்கை வன்மை பெற்றிருத்தலேயாம். செயற்கைப் பயிற்சியைப் 'பழக்க'மென்றும், இயற்கை நிகழ்ச்சியை 'வழக்க'மென்றும், இவ்விரண்டின் கடைப்பிடியை 'ஒழுக்க'மென்றும் முன்னோர் வழங்கிவந்துள்ளனர்.

சிலர், முதலிற் பயன் கண்டு பழகிய பழக்கங்கள், பின்னர்ப் பலராலும் பல காலத்தவராலும் பின்பற்றப் படும் மேன்மை வாய்ந்தனவாய் விளங்கினால், நாளடைவில் அவை வழக்கங்களாய் மாறி இயற்கை யாற்றலோடு நிகழத் தொடங்கிவிடுகின்றன. இச் செயற்கை யியற்கைகளின் இயைபையும் ஆற்றலையும் நன்கறிந்து மக்கள் தம் வாழ்க்கையிற் கடைப்பிடியாய்த் தழீஇ நடக்குமிடத்து, அந் நடக்கையே 'ஒழுக்க'மென நுவலப் பட்டதெனக. 'பழக்கம்' 'வழக்கம்' 'ஒழுக்கம்' என்னும் இச் செயற்கையும் இயற்கையுஞ் செயற்கை யியற்கையுமான வாழ்வியல் முறை மூன்றையும் **ஆசிரியர் தொல்காப்பியர்**,

> "தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
> பகுதிக் கிளவி வரைநிலை யிலவே"

என்னும் ஆற்றல் சான்ற நூற்பாவில் முறையே அழகாக நுவன்று நிறுத்தியிருக்கின்றனர். இவற்றுள், 'தகுதி'யென்பதனாற் பழக்கமும், 'வழக்கு' என்பதனால்

வழககமும, இவை தமிழியின 'ஒழுகும' எனபதனுல ஒழுககமும ஆசிரியராற புலப்படுததபபட்டுள்ளன. இதனகண வரும 'வழககு' என்பதையே பினவந்தோா, நனகு விளஙகலவேணடி, 'இயலபு வழககு' என விதந் தோதினுராகலின,மறறிஃதொனறேயும, வழககெனபது இயறகையாறறலாய உலகில நடைபெறறு வருவதென னும உணமையைத தெறறெனப புலபபடுததுவதாகும.

## 1 வழக்கின் நன்மை

இனி, இவ் வழககம எனனும உயிர்பபு மிக்க நெறி யானது, மககள வாழ்ககைககு முயறசியறறோா எளி மையூட்டி, முனனும பினனும வழிவிளஙகச செயது பெருநலம விளைததுவருகின்றது. காலையில எழுநதது முதல மாலையிற றுயில செலலுந துணையும அவரவருந தததம வாழ்க்கை முயறசிகளை இனபமும எளிமையு முணடாகத் தெள்ளறிவோடு நடததிச் செலலுதறகுத, தொனறுதொட்டே நடைபெறறுவருகினற பறபல வழக்கஙகளனறோ மாநதாககு வழிவகுததுத துணைபுரி கினறன! முனனோா பலரும தததம அறிவான்ற நன முயறசிகளால வருநதிப் பயினறு தேறிய நன முடிபுகள பலவும இஙஙனம வழககஙகளாக மாறி மிகக உயிர்ப் போடு இயஙகிவருத லிலலையேல, கருவிலிருந்து வெளிப போநத சிறுமதலையின நிலைதானும மிக இரஙகத தகக தாகவனறோ முடியும?

முனனர்க குனறுகளில இருநது உயிர்வாழ்நது வநத நம முது தமிழ மக்கள், பலகால் இடாப்பட்டுப

பட்டுத் தத்தம் அறிவு உழைப்புகளின் பயனாகச், சரிந்த நிலப்பகுதிகளை முதலில் எவ்வாறோ தெரிந்து திருத்தி வித்திட்டுப் பயிர்விளைக்கக் கற்றுக்கொண்ட பழக்கமானது, பின்னர் வழிவழியே வழக்கமாய் நடைபெற்று வருதலானன்றோ, இஞ்ஞான்றைத் தமிழ் மாந்தரனை வரும் அவ் வழக்கங் கடைப்பிடித்து மிக எளிதாக உழவு முறையுணர்ந்து பயிர்செய்து ஏராளமான கூலவகைகள் குவித்துத், தத்தம் மனைவி மகார் உறவினரோடும் விருந்தோடும் இனிதிருந்து நாத்தட்டிச் சுவையோடுண்டு இன்பமார்ந்து வருகின்றனர்! இங்ஙனமே முற்காலத் தமிழ்ப் பெரியோர்கள், திருமணம், மக்கட்பேறு, பிறரோடு அளவளாவல், பொருள்நிலை, அறத்துறை முதலிய பலவேறு வாழ்க்கை முறைகளையுந், தத்தமது வாழ்க்கையில் முன்வைத்துப் பயின்று பயின்று பயன் கண்டு, பின்னரவற்றை விளக்கி வழங்கவைத்தமையானன்றோ, இற்றைஞான்றைத் தமிழர் அவற்றை மிக எளிதாகத் தத்தம் வாழ்க்கையிற் கையாண்டு இன்புறுதல் இயல்பாயிற்று!

இஃதொன்றோ; மாந்தர்தங் கண்ணெதிரில் என்றுஞான்றுங் காண்டற்குரியதாய மண் புனல் அனல் முதலியவற்றாலான இப் பருப்பொருளுலகே விளங்கி வருவதாக, மற்றிதனைப் பண்டைப் பெருந்தமிழர் தம் நுண்ணிய பகுத்துணர்வும் புண்ணிய அறத்தெளிவுந் திண்ணிய கடைப்பிடியுங் கொண்டு, ஆழ்ந்து ஆழ்ந்து பலகால் முனைந்து நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, அங்ஙனம் உணருமாற்றால், தம் அகம்

புறமெஙகுந் திளைத்தெதிாநத மெய்யுணாவினிற பழகிப் பழகி நெகிழநது நெகிழநது, அப பழகக நெகிழசசிகளின முடிவில தாம மிக அரிதிற கண்டு தெளிநத இவ்வுலகின படைபபு முறைகளும், இவ்வுலகில உலாவும் எணணிறநத உயிாததொகைகளின இயலபும, அவற்றின இமமை மறுமை யுணமைகளும, இவையெலலாவறறின இயககஙகட்குந தனிமுதற றலைமை பூணடு இவ் வெலலாவறறினூடும எஞ்ஞானறும விராஅய் விளஙகுவதான ஒரு தெள்ளொளிப பெருமபொருளின் இருபபும அதன விழுமிய ஆறறலகளுமெலலாம, ஏனைப் பிறர்மாட்டு வைதத பேரருட்டிறனுற புறததே விளங்கப் புலபபடுத்தி வழககாறறுட படுததினமையானன்றே, இறறைப் பாலமண மாருச சிறுமகார் தாமும நமது நாட்டில இறைவழிபாடும அறவுரையாடலு முடையராய மிக எளிதில மெயயுணாவியககந தழீஇ வளரல காணகினறனம !

நம் முனனோா, இஙஙனமெலலாந தம அறிவு உணாவுகளின பெரும் பழககஙகளால மெயமமைகள தோநது வழஙகி வையாராயின, நமமனோா இனறு இததுணை வாழககைத தெளிவினை யெயதி நாகரிகராய நிலவல எஙஙனம இயலும ? இவவியல்பினை மனமொருஙகிச சிறிது அழநதி நினையுஙகால, இக் கால மாநதராவா ரனைவரும முறகால மூதாதையரிடம எத்துணை நன்றியுணர்வும நற்பணி வேட்கையு முடையராய உருகியொழுகி, அணணிககும வாழககை நடததுதல்வேணடு மெனபது, தெறறெனப புலனுகினறது.

சங்க காலததில நம முனனோபால இந நனறியுணாவும் செயலும மிகவுங கொழுநதோடிய பொலிநதிருந்தன. இதனுல, அவர்கள வாழககை பல துறைகளிலும் விளககமும வெறறியு முடையதாய இனபவூறலாய்த் திகழுநதிருநதது எனலாம

## 2. இருவகை வழக்கு

இனி, இவ் வியறகை வழககமெனபது இஙஙனஞ் செயறகைப பழககததினினறே வழககாறுறறு வரும் எனபது,

" இயறகைய ஆகும செயற்கைய "

எனனுந **தொல்காப்பிய** நூலின மெய்மமொழியினுல் நனகு பெறபபடும. நச்சினுர்ககினியர் இவ்வியலபினைப் 'பழக நடந்த கூறு' எனக கிளந்து கூறுவா. இவ் வழக்கமே பினனாச் செயயுளும இலககணமுமாய முகிழத்து விளஙகுவதாயிற றென்க.

ஆசிரியர் தொலகாப்பியர் தமது அளப்பரிய பெருமாட்சிததான தொலகாப்பிய இலககணததை,வழககுஞ் செய்யுளுமென்னும இவ்வுலகியலின அடிப்படை கொணடே திறவிதாய் இயறறி நமககு அளிததிருக்கினறனா அதனுலனறே அது, முறறும உலகநடை பிறழாது நடந்து எனறும உயிாப்பாறறலும் ஒளியு முடையதாய நிலையாய் நிலவி வருகினறது! தொல்காபபியநூல முழுமையும ஆசிரியா தாங கைப்பறறிச் சென்ற இவவியலபினை,

"ஓலவழி யறிதல் வழக்கத தான"
"தக்கவழி யறிதல வழக்கத் தான"
"தொழிற்படக் கிளத்தலும வழககியல மரபே"
"வழக்கொடு சிவணிய வகைமை யான"
"வருவகை தானே வழக்கென மொழிப"

என அங்கங்கும நனகு புலபபடுததியிருககினறனா. இவ் வுணமையையே அந நூலின சிறப்புப் பாயிரமானது,

"வழககுஞ் செயயுளும ஆயிரு முதலின்"

எனவும,

"செநதமி ழியறகை சிவணிய நிலத்தொடு
முந்துநூல கணடு"

எனவும விதநது விளககியிருககினறது. ஆதலால, தொல்காப்பிய நூன முழுமையும 'வழககம' எனபது பற்றி நாம் அறிநதுகொளளறகுரிய குறிபபுககள நிறையக காணபபடுகின்றன அவைதமமுட சிறசில வேனுமஈணடெடுத்து ஆராய்தல பயனறருவதாயிருககு மாகலின, மிகப பழைய தனி முதலாசிரியருந தெயவத தவமுதலவருமான அந நூலிறுசிரியராந தொல்காபபிய முனிவரரின் கருததுககள அதுபறறி இனனவெனபதை இனிச் சிறிது கருதிக காணகுவம.

## 3. உலகியல் வழக்கு

உலகிற் பலரும பறபல துறைகளில் முயறசியும பயிற்சியுமுடையராய் வாழ்நாட் கழிததுவருகினறனா. அவ்வாறு பயினறுவருவோா, இயல்பாகவே நுண்மை

பும ஒணமையுங தவமும உடையராயின, அவா செய்பும முயறசியும பயிறசியும் பிறராற் றழுவியேறகத் தக்க,

“ நுணமையொடு புணர்நத ஒண்மைத் தாகித
துளக்கல ஆகாத துணைமை யெயதி
அளக்கல ஆகா அருமபொருட் டாகிப
பலவகை யானும பயனதெரி வுடைய ”

தாய ஆறறலுறறு வழககாறுகினறது. இதனைப
‘ பயன நிலை புரிநத வழககு ’ எனபர் ஆசிரியா

பினவரும அறிவான ஆனறோாககு முனனோர் செயது நிறுததிய அப பழககமானது அறிதறகும ஆராய்தறகும ஏதுநடை வாய்நது இனபுறுததலின், அவரதனைத் தததஞ செயலகளினும எடுததாணடு வழங்கும அரு விழைவுடையராய ஒழுகி, மேலுமேலும் வழககினில அடிப்படடியலச் செய்கினறனா. இஙஙனம ‘ ஏதுநடையினும எடுததுக்காட்டினும மேவாங் கமைநத மெயந நெறிதத’ தாய வழககுத தொடாபுறறு வருதலால், அதனை ஆசிரியா,

“ பொறபுடை நெறிமை ”

எனப் பாராட்டித தழீஇககொள்வா.

முதலிலெழுநத உயாநதோா பழககஙகளும அதனை அடுத்தடுததியைநத உயர்ந்தோரொழுககஙகளும், இங்ஙனம வழக்குகள் இயலாறறல் கொளளவும எதிர் நிற்பதெதூஉமினறிப் பேரியககங காணவும ஏதுவாதலின, அலையெறிந்து கரைபொருது பெருகியோடும

ஒரு பேரியாறறின் நீர்வழிப் படூஉம புணைபோல ஏனை யோர் செய்கைகள் அவ் வழக்கினூடே எளிதின மிதநது செல்லல வேணடுமெனபாா,

“ உயர்ந்தோா கிளவி வழககொடு புணர்தலின்
வழக்குவழிப படுதல செயயுட்குக கடனே ”

எனவும,

“ முடிய வந்த அவவழக் குண்மையின்
கடிய லாகா கடனறிந தோர்க்கே ”

எனவும உடனபாட்டானும, எதிாமறைக்கு அமைதி கிளககுங காரணப்பாட்டானும யாபபுறுதது ஆசிரியா நூறபா விதிபபாராயினா.

உரையாசிரியா **இளம்பூரணரும்**, வழககுகள, ஒரு யர்ந்த மலைமுகட்டினறிழியும அலையாறுபோல உயாந தோாமாட் டிருநது, விலையிடுதறகரிய அவரது பேராறறலான உநதுதலுறறு வழஙகிவருதலால, “ ஒரு முனைவனற செயயபபடின முதனூலாம ; பிறர் செய யின வழஙகாது ” என்று தீாநத கருததோடு முடி புரையாஙினறனர். வழககு இததுணை இயறகையாறற லுற்றுச சேறலாறறுன, அதுவே உலகிற செலலத தகுநத தெனனும் பொருடோனற **நச்சினார்க்கினியர்** அச் சொலலுககுச் ‘செலவு’ எனவும பொருளதிகாரவுரையில ஓரிடததில உரைகூறினா. கருதது வேறுபட்டாரிருவர் அறமனறஙகளிற சென்று தொடுககும முறைபபாடும, யாணடுஞ் செலலறகுரிய உயிாப்பாற்றல மேவிய வழக் காறறினையே அடிபபடையாகக கொணடு நிகழதலால,

'வழககு' 'வழக்காடுதல' எனனும பெயரால அது வழஙகப்படுதல காணகினறனம. ஆசிரியரும் அதனுல இதனைச "சிறப்புடை மரபு" என மேமபடுததிச செலவா.

உயாநதோா பழக்கஙகள இஙஙனந தமமியலபில மேமபாடுடையவாய வழககாருகிப் பின்வருவோர் கருததுககளை ஈாததுச செலலுதலால,

"அறியத் தோனறிய வழககு"

எனவும ஆசிரியரால அது நுவலபபடும. பின்வரும உயாநதோரானனறி, ஏனைப பொதுமககளாலும் அறிநதோ அறியாமலோ தழுவி யொழுகுதற்கேறற அடிபபட்ட நெறியினை அது வகைபபடுததி விடுதலால,

"நெறிபட வழஙகிய வழக்கு"

என்றும விளம்பப்பட்டது இவ்வாறறால, வழககு எனனும உலகவழககானது, உலகில தோறறமுறறு இயஙகிவராநினற இயறகை நனகுணாநதுகொளளப் படும. வழககெனபது தனனியலபில உலகவழககினையே உணாததுதல,

"செயயுள் மருஙகினும வழக்கியல மருங்கினும"

எனனும ஆசிரியா கூறறின வைததுக கண்டுகொள்க.

## 4 புலனெறி வழக்கு

இனி, வழககெனபபடுவதே உயாநதோராற றானறி உலகினகண நெறிபபட்டுவருமெனவின அஃதொனறே அமையுமாகவுஞ, செயயுள் வழககென வொனறு அதனவழித தோனறுமெனல் எறறுககோ

வெனின், அவ் வுலகியல் வழக்கின் சொல்லோவியமே செய்யுளல்லது வேறில்லையெனக. இவ் வுண்மையினை ஆசிரியரே,

"மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான"

"மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூல்"

என்று விளக்கமாக விதந்தோதியதுமன்றி, அம் மரபு நிலை திரியின் உலக வழக்குஞ் செய்யுள் வழக்கும் வேறுவேறாயப் பிரிந்து பயனின்றி யொழியுமென மறைமுகத்தானும் விளக்கி,

"மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்."

எனத் தெளித்துணர்த்துதல் காண்க. எனவே, இரு வகை வழக்கும் அவற்றின் அடிப்படையில் ஒன்றே யாதல் தேற்றமாம். இதனாலன்றோ செய்யுள் வழக்கினையும் ஆசிரியர் சிற்சில விடங்களில் 'வழக்கு' என னும் பெயரினாலேயே சுட்டிச் செல்வதூஉமெனக.

அற்றாயின், உலக வழக்குக்குஞ் செய்யுள் வழக்குக் கும் யாதும் வேறுபாடே இல்லைபோலு மெனின், அற் றன்று; வழக்கெனனும் வகையில் இரண்டும் ஒன்றே யென்றதனறிப் பயனுறுத்தும் முறையிற் சிற்சில வேறு பாடுளவாதலும் அறிதல் வேண்டும் உலகவியற்கையில் யாண்டும் நடைபெறும் நடைமுறைகள் பலவும் ஒருவர் ஒரு நேரத்தில் அறிந்துகொள்ளலும், அறிந்தாங்குப் பிறர்க்குப் புலப்படுத்தலும் இயலாதன்றே? அன்றியும்,

இழைநிலை நெகிழ்ந்த மள்ளற் கண்டிகும்;
கழைக்கண் நெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே"

எனவும்,

"கறங்குவெள் ளருவி யேற்றலின் நிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோடு
அள்ளிலைத் தாளி கொய்யு மோனே;
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே"

எனவும் விளங்க உரைக்குஞ் செய்யுட்கள் **புறநானூற்றின்**கண் வந்திருந்தல் ஈண்டு நினைவுகூரற்குரியது.

பண்டைக்காலத்தில் ஆசிரியர் தொல்காப்பியர், திருவள்ளுவர், பிசிராந்தையார், கோப் பெருஞ் சோழன், கபிலர், இளங்கோவடிகள் முதலிய மெய்யுணர்வு மிக்க சான்றோர் பலரும், சிறந்த செல்வ நுகர்ச்சிக்கண் நின்று வயங்கி மேன்மேற் றெளிவடைந்து தெய்வத் தன்மையுற்ற மேன்மக்களே யாவர். **காரைக்காலம்மையார், பட்டினத்தார், தாயுமானுர்** முதலிய பின்னைக் காலத் தவப் பெருமக்களும் உயர்ந்த செல்வ நுகர்ச்சியினின்று துறந்து விழுப்பம் எய்தியோரே யென்பது அனைவரும் நன்கறிந்த உண்மையாம். **மணிவாசகப் பெருமான்** பாண்டியன்பால் அமைச்சராயிருந்து விலகிச் சிவத்தொண்டிற் றலைப்பட்டதும், **திருநாவுக்கரசர்** இளமையிற் பெருஞ் செல்வராயிருந்து அச் செல்வப் பொருளை

யெலலாம பலாககும வழஙகி அறஞசெயது விட்டுந் துறவுபூணடதும யாணடும நினைவுகூரறபாலன. **திருஞானசம்பந்தப்பெருமான்** தமது குழநதைபபருவததில மிககசெல்வாககினில வளாநது விளஙகின பெருஞசிறப்புககள் திருததொணடா புராணததில நனகெடுததுக காட்டப்படுதலின, அத தெயவ குரவரும வளததிற றிகழநது பின அருடபெறறுய்திய நலன தானே பெறபபடும. **திருநாவலூரரோ,** நரசிஙக முனையரையரின செலவச சிறுவராகவே வளாநது பொனனும மெயப்பொருளு முடையராயப பெருநதுகாசசியிற றிளைததவராவா. ஏனை அறு**பான் மும்மை நாயன்மாருட்** பலரும பறபல வளஙகளிற றிகழநது பின திருவருள பெறற விழுமியோரேயெனபது, அவாதம வரலாறுகள நுவலும **திருத்தொண்டர்புராண**முதலியவறறைப பயிலவாரெவரும நனகறிநத தொனறேயெனக. அவருள, முடியுடைமனனரும, குறுநில மன்னரும, மிகுவளங கொழிதத பெருங்குடி வணிகரும், செழுஙகுடி யுழவரும, அந்தண செலவரும, ஆனினச செலவரும ஐமபதினமர்ககு மேறபடடவராவரெனபதும, ஏனைக குயவர் பரதா மறவர் முதலியோா சிலரும அவரவா குடிககண வளம மிகத் திகழநதவரேயாவரெனபதும அறியுங்கால, அவரவருந் தததங கூறறைப பாகுபட மிகுதிபபடுததி நினற வாகை யெலலைக்கண், காஞசிப் பொருளுணாநது விழுபபஞ சானறு பாடாண்டிணைககுரிய பேராவியறகையினை யெயதின மாட்சி தெறறெனை விளங்காநிறகும. **ஆசிரியர் மெய்கண்டதேவரும், திருமங்கை மனனர்** முதலிய ஆழவாா பெருமகக

ளும இனனா. **மகாவீரர், கௌதமசாக்கியர்** முதலிய சமண புதத சமயத் தலைவருஞ் சிறநத அரச நுகாசசியினினறு துறவடைநத மேனமககளே யாவா. இவ்வாறறூல, ஆசிரி**யர் தொல்காப்பியனார்தம் பொருளிலக்கணத்தின்** இயறகை நெறியும மாடசியும இனிய மதிநலனுடையாரெவாககும உளளுநதொறும பெரியதோ ரிறுமபூதும ஆராமையும பயப்பனவாய்த திகழதல ஒருதலையாமெனக.

இஙஙனம இப பொருளிலககண அறமுறைமை கடைபபிடிததுப பணடைத தணடமிழக காலததிற றமிழகமெஙகுந தவஞான வுணாவுடையோா திரளதிரளாக அஙகஙகும விளஙகித திகழநதிருநதனா. இவவுணமையும,

"எறிததரு கதிர்தாஙகி ஏநதிய குடைநீழல
உறிததாழநத கரகமும உரைசானற முககோலும
நெறிபபடச சுவலசைஇ வேறுரா நெஞ்சததுக
குறிபபேவல செயனமாலைக கொளைநடை யநதணீா"

எனக **கலித்தொகை**யானது அததகையதவமுனிவரரைப் பனமைக கிளவியால விதநதோதுதலானறியும, அதனை யடுதது,

"வெவவிடைச செலன்மாலை யொழுககததீா"

என அவர் தமிழநாட்டின கானக முதலிய இயறகைச் சூழலகளில யாண்டும நிலவித திகழநதமை நுவலலுங கொணடு நனகறியப்படும. இக கலிசசெயயுளில ஓரிடததிற 'காணிரோ பெரும' என ஒருமைககிளவி தொடுக்கபபட்டிருததலறிந்து, இதன் உரையாசிரியரான

**நச்சினார்க்கினியர்,** "பெரும எனறுள் அவர்கள் ஆசிரியனு கிய பெரியோனை; அநதணா அவன மாணுக்கர்" என, மேறகுறிதத முனிவரா குழாம ஆசிரியரும மாணுககரு மாய ஆணடு விளஙகிய உணமையினைத தமதுரையில எடுததுக காட்டுதலால், தவமுனிவரா பரமபரையை இத் தமிழகம வழிவழி யுடையதாய விளஙகிவருந் தெய்வ மாட்சியும இனிது தெளியபபடும். இஙஙனம பண்டைத் தமிழகம எஙகுந தவம பரநத தமிழகமாய விளங்கி யிருநதது.

இனி, ஆசிரியா தொலகாபபியர் தமது பொருளிலக் கண முறையிற புலபபடுததியிருக்கும மறறெரு வகை நுணபொருளும பெரிதுங கருதபொருநகி யுணர்ந்து இனபுறறபாலதா யிருககினறது. நுகாச்சி முதிரநத வாகைப் பகுதியும, அதனெலலைககண நிலையாமைக் குறிபபால விழுபபமுணருங காஞ்சிப பகுதியுங கூறி விளககிய பின், அடுதது இறுதிககண அவ் விழுபபம் ஏததும பாடாணபகுதியை நிறீஇப பெறறகரியதோர் மெய்ம்மை தேற்றும் நுட்பம் மிக விழுமிதாகும். நினைநதது நினைநதாஙகுத தகுதிபெருதுந தகுதி கருதா தும பொருளுஞ் சுவையுமினறிப் பாடியறறிவிடும பிறறைக காலச் சொறபயிறசியாளர்ககு, இஃதொரு பேரறிவுறுப்பாகும. புலவரெனபார் பண்டைக்காலத் தில வெறும மொழிப பயிறசியாளராகக் கீழ நிலையில் இருந்தவரலலர். சொனனது சொனன வணணம் ஆறற லொடு நிகழுமாறு குணமென்னுங குன்றேறி நினற நிறைமொழி மாநதராய், ஞானப் பயிறசியாளராய்

வயஙகியோராவா. இவ் விழுபபம புலவனமாாகவுரிய செலவமாதல பறறியே,

"வேண்டாமை யனன விழுச்செலவம"

என ஓதிய தெயவச செஙநாக கொண்டு **திருவள்ளுவ நாயனார்,**

"கேடில விழுசசெலவங கலவி"

என விழுசசெலவ வாயபாட்டாற கலவியையும ஓதி யருளுவாராயினா. பேராவியறகையாகிய வேணடாமை யெனனும வீடுபேறும, அதனை யளிககவலல அழியா வியறகையாகிய கலவி யெனனுஞ சமனிலைக கருவி யுமே 'விழுச செலவம' என ஓதுதறகுரியவாதலால, நாயனாா வீடு ஞானம எனனும இவவிரணடையு மட்டுந தந தெயவத தமிழ மா மறையில அஙஙனம ஓதிச சிறபபிததருளினா

"சிவனடியே சிநதிககுந திருபபெருகு சிவஞானம
பவமதனை யறமாறறும பாஙகினிலோங கியஞானம
உவமையிலாக் கலைஞானம் உணாவுரிய மெயஞ்ஞானம்
தவமுதலவர் சமபநதா தாமுணாநதா ரநநிலையில'

என இவை தவப்பயிறசியினமேல அருடகொடை யாகப பெறறகுரிய விழுப்பேறுதலும, தமமில இயை புறறமைதலும், விரிதது விளககும பிறறைக காலச **சேக்கிழார்** தெளிதமிழும,

"நலலமயாம் என்னும நடுவு நிலைமையாற
கலவி யழகே யழகு"

எனக கல்வியைச சமனிலை யெனனும ஞானவுணர்வின் மேல் வைத்துரைக்குஞ ஙக காலதது **நாலடியார்த்** திரு

மொழியும் இவ்வுண்மையை விளங்கத் தேற்றுதல் நினைவுகூரற்பாலது.

இத் தவஞானக் கல்வியின் விழுப்பமே புலவாகற் குரியதாதல், "பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே" என்னுந் தொல்காப்பியப் பகுதிக்கு விளக்கம் உரைக்கும் நச்சினார்க்கினியர் "ஒரு தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்ட, ஒரு புலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டலின், அவை தம்மின் வேறாகிய ஒருதலைக் காமமாகிய கைக்கிளையோடொத்தலிற் பாடாண்டிணை கைக்கிளைப் புறனாயிற்று" என விளம்புதல் கொண்டு சற்றும் ஐயுறவின்றித் துணிந்துகொள்ளப்படும். வீடு பெறுதற் குச் சமைந்தானோ இரவலனை வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்ததாகிய திருமுருகாற்றுப் படை யென்னுந் தவஞானச் சங்கநூல் புலவராற்றுப் படையே யாதலின், மற்றிதுகொண்டுங் கேடில் விழுச் செல்வராகிய புலவர் வேண்டும் விழுமிய பெறலரும் பரிசில் வேண்டாமை யென்னும் வீடுபேற்று விழுச் செல்வமேயாதல் தெற்றென விளங்காநிற்கும். திருமுருகாற்றுப்படையிற் "புரையுநரில்லாப் புலமை யோய்" என முருகனை விளித்துப் புலமைக் கிளவியால் ஒரு தொடர் வருதலும், ஆண்டதற்கு மெய்ஞ் ஞானத்தையுடையோய் என உரை கூறப்படுதலும் புலமை யென்பது இன்னது என்னுங் கருத்து நன்கு விளங்குதல் காண்க.

இங்ஙனம் நக்கீரர் என்னும் வீடுபெற்ற புலவர், வீடு பெறுந் தகுதியுடையராகிய ஞானப்புலமையாள ரொரு

வரை அவ் விழுமிய பரிசில் பெறுவித்தற் பொருட்டு முருகனிடத்தே ஆற்றுப்படுத்துதலை அப் பாட்டு உணர்த்துதலின், பாடுவோரும் பாடப்படுவோரும் பாடும் பொருளுமாகிய பாடாண்டிணைப் பகுதிகள் இன்ன வாதல் வேண்டுமென்பது நன்கறியக் கிடந்தமை தோன்றும். ஆசிரியர் தொல்காப்பியர் கூறும் பாடாண் பகுதி யுண்மைகள் இத் தூய பெரும் பொருள்களின் மேலன வேயாதல், அவை நிலையாமைக் குறிப்பு முதலிய ஞானப் பகுதி யுணர்த்துங் காஞ்சித் திணை நுவன்றபின் அதனை யடுத்து விளம்பப்படுதலானும், அங்ஙனம் விளம்பு மிடத்தும் 'அறுமுறை வாழ்த்து' முதலியவாகத் தெய்வச் சிறப்புக்களின் பெற்றி தேற்றித் தெளித்துக் கூறப் படுதலானுந் தெளிய உணர்ந்துகொள்ளப்படும்.

பாட்டிசைக்கும் நல்லிசைப் புலவர்தம் நோக்கம் யாண்டும் இக் கடவுட்டன்மையை விளங்கச்செய்தலே யாக, அப் பாட்டுக்குரியோர் பெரும்பாலும் முற்றக அந் நோக்கம் இல்லாதவராயிருத்தலின், பாடாண்டிணை ஒரு மருங்கு பற்றிய கைக்கிளைப் புறனாயிற் றென்று ஆசிரியர் கூறுதல் சாலவும் உண்மை மேவியதேயாம். பாடப்படுவோர் முற்றக அந் நோக்கம் இல்லாதவரா யிருப்பினும், உண்மைகளை எடுத்துக்காட்டிய வளவில் அவரவற்றை அறிந்து தெளிந்து விழுப்பமெய்துந் தகுதி யுடையோராதலின், அவர் போன்றாரும் புலவர் பெரு மக்களாற் பாடுதற்குரியராயினர். ஆயினும், பாட்டு அங்ஙனம் அவர் பொருட்டதேனும், ஆண்டுப் பாடப் படும் பொருள் உண்மையிற் கடவுட்டன்மைகளேயாத

வின, இனஞேரனன தவஞானப பகுதி கிளககும மெய்ந நூலகட்கு இறைவனே தலைவனுகறபாலன். ஆதலி னனறே, பததுபபாட்டின முதற பாட்டாகிய நககீரர் நூல புலவராறறுபபடையாயிருநதும ஏனைக கூததர் பொருநா பாணுறறுபபடைகள போல அஃதப பெய ரான் வழஙகாது, 'முருகாறறுப படை' யென 'முருக னிடதது ஆறறுபபடுதத்' தென்னுங கருத்தில இறைவன மேலதாய வழஙகிவருகினறது! **நச்சினார்க் கினியர்** தொலகாப்பியவுரையிற பாடாண பகுதி யிறுதி யில, ஆறறுபபடை பறறிக கருதியவிடதது இம முரு காறறுபபடையை நினைநது, "இதனைப 'புலவராற்றுப படை' யெனறு உயததுணாந்து பெயா கூறுவாராகது 'முருகாறறுப படை' யெனனும பெயரனறி அப் பெயர் வழஙகாமையான மறுகக" என வழககுத் தெளி விததல கொணடும இவ்வுணமை தெருளறபாலதாகும்.

தலையாலஙகானததுச செருவென்ற பாணடியன நெடுஞ்செழியனுககு **மாங்குடி மருதனார்** எனனும் புலவா தலைவா, பாடாணடினை பறறி முடிநிலைப பேருகிய கட வுடடனமை கிளவாது, காஞ்சித திணை பறறிப பலவேறு நிலையாமைக குறிபபுககள செவியறிவுறுததவிடததும, அநநூல வேறெருரு பெயரால 'மதுரைக காஞ்சி' யென வநததும, அந நிலையாமைக குறிபபுககளாகிய ஞானக கூறு மனறி ஏனைத திணைகள பறறிப் பொதுவகையா னுரைககும பாடடுககளும பெரும பானமையும அக்காலத்திற பாட்டுடைத தலைவன் பெயராற பெயரமையாது 'குறிஞ்சிப பாட்டு

'முலலைப பாட்டு' முதலியவாக வேறுவேறு பெய ராற பெயரமைநதிருததலும உறறுநோககு லுறு வாாகருச, சஙககாலப புலவாதம மெயபபோக்கும, அடக கமும, எலலாம வலல கடவுட்டனமை யொனறிறகே முதனமை தநது, அது வானும மண்ணுமாகிய உலகியற கையிலும ஆனின முதலிய சிறறுயிரியறகையிலும, வானவா அநதணா அரசா முதலிய பேருயிரியறகை யிலும வாழககையிலுங கலநதுங கடநதும வியககத தகக வகையிற சுடாவிரிநது மிளிராநிறகும அருணிலை யுணமையினையே பலபல வகையாயக கிளநதும விதந துந தமதினிய பொயயாச செநநாவினுற பாடும பாடாண ஒழுககமும, தெயவப் பெறறியும நனகு விளஙகும.

"செய்யுள நிகழ சொறறெளிவும
செவவிய நூல பலநோககும
மெய்யுணர்வின் பயனிதுவே
யெனததுணிநது விளஙகியொளிா
மையணியுங கணடததாா
மலரடிக்கே ஆளானா
பொய்யடிமை யிலலாத
புலவரெனப் புகழமிககார்"

எனப பிறகாலததிற சேக்கிழார் பெருமான் இப பொய யடிமையிலலாப புலமையின ஞானபபெறறி ஈதெனை விளககிககாட்டும அருமை, எணணுதோ றெணணுதோ றிறுமபூதும இனபமும பயநது, 'புலவாதம விழுபபம இனனது கொல' எனனும ஆராமையிற றலைபபடுவிக கினறது. ஞான மெய்நநிலை நினறு அதனைச் செய்யுள

நிகழ் சொற்றெளிவாற் புலப்படுத்தாதாரும், அதனை அதனால் ஓலலும் வகை புலப்படுத்துவாருமென இரு வகைப்பட்டு விளங்கலுறுந் தெய்வ நிலையினருட், புலவர் பின் வகையினராவர். இதனால், அவர்தம் விழுநிலை நன்கு தேறப்படும். அவர் ஒரு புலலை நோக்கிச் செய்யு ளிசைப்பினும், ஆண்டுங் கடவுட்டன்மையே சிறந்து விளங்காநிற்கு மெனக.

இத்தகைய பொய்யடிமை யில்லாத புலவர் எண் ணிறந்தோர் நிலவிய காலம் சங்க காலமெனின், அக் காலத்தின் தெய்வத்தன்மைதான் எத்துணைப் பெரு மாட்சிமையுடையது!

### 3. சங்ககாலத்தின் அருஞ்செயல்கள்

இனித, திருமூலா, திருஞானசம்பந்தர், நம்மாழ் வார், மெய்கண்டார் முதலிய தெய்வ ஆசிரியர்கள் விளங்கிய பிற்காலங்களில் அவ்வவராலும் ‘அற்புதம்’ எனனும் அருஞ்செயல்கள் பலபல நிகழ்ந்து விளங்கி னறபோலத், தொல்காப்பியா, திருவள்ளுவா, கபிலர், இளங்கோவடிகள் முதலிய தெய்வத் தொல்லாசிரியர்க ளான தவப்புலவரர் நிலவிய சங்க காலங்களிலும் அவ் அற்புதம் எனனும் **விழுப்பங்கள்** எண்ணிறந்தன நிகழ்ந்து பண்டைத் தமிழக முழுமையுந் தெய்வ நறுமணங் கமழா நின்றமை அறிய அறிய, அது மிகக விம்மிதம் பயப்பதா யிருக்கின்றது.

சிவத்தின் திருவருள் பெற்றவனுய, அதனால் மிகக ஆற்றலும் அருட்டன்மையும் வாய்ந்து செல்லுமிடந

தோறும் வெற்றி மிலைந்து வீறு மிக்கவனுயத், தன் காலத்தில் ஏராளமான சிவபிரான் றிருக்கோயில்களை எளிதின் எடுப்பித்துச் சிவத்தொண்டனுய, அவ்வாற் ருற், சைவசமயத் தெய்வகுரவராய விழுப்பம் வீறிய நம்பியாரூரர் முதலிய திருமுறையாசிரியர்களால் அறு பானமும்மை நாயன்மாரு ளொருவராகச் சேர்த்து வழி படப் பெற்ற அருட்டிருவினனுய வயங்கிய **கோச்செங்க ணுன்** என்னுந் தவவேந்தன் நிலவிய காலம், தெய்வச் சங்க காலமே யாதல் அனைவரானுந் தெளிய அறியப் பட்ட மெய்ம்மையன்றே !

சங்க காலம் எல்லாச் சிறப்புக்களையும் நன்கறிந் திருந்தமைபோலத் தவஞானச் சிறப்பினையும் விளங்க அறிந்து தலைமை பெற்றிருந்தது. **திருமுருகாற்றுப் படைக்**கண் திருவாவினன்குடிச் சிறப்பாக வருகின்ற பகுதியில் முனிவரரியல்பு,

"சீரை தைஇய உடுக்கையர், சீரொடு
வலம்புரி புரையும் வாலுநரை முடியினர்,
மாசற விமைக்கும் உருவினர், மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர், நன்பகற்
பலவுடன் கழிந்த உண்டியர், இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதுங்
கற்றோ ரறியா வறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர், காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர், இடும்பை
யாவதும் அறியா இயல்பினர், மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புக ..

அந்தரக் கொட்பினர் வந்துடன் காண, முருகன் தாவில் கொள்கை மடந்தையொடு ஆவினன்குடி அசைதலு முரியன்" என்று திருவாய்மலர்ந்தருளப்பட் டிருக்கின்றது. தவத்தின் மாட்சியை அக்காலத்தவர் எத்துணைத் திட்பமாக உணர்ந்து விளங்கினரென்பதற்கு இவ்வொரு பகுதியே தலைசிறந்த எடுத்துக் காட்டாகும். இதனாற்றான் அவர்,

> " வையமுந் தவமுந் தூக்கின் தவத்துக்கு
> ஐயவி யனைத்தும் ஆற்றாது " (புறம்)

என அதன் ஆற்றலை நன்கு தெரிந்து துணிந்திருந்தனர். சங்ககாலப் பெரியோர், நோற்றலின் ஆற்றலில் தாமே தலைப்பட்டு அருணிலைக்கண் விளங்கினாலன்றி, இங்ஙனந் துணிந்து கூறல் ஒல்லுங்கொல்? இத் தெய்வத் தன்மையினால் அவர் கூற்றுங் குறித்தலுங் கைகூடி, ஒன்னார்த் தெறலும், உவந்தாரை யாக்கலும், வேண்டிய வேண்டியாங் கெய்தலும் வாய்ந்தாராய்ப், பற்பல அருஞ் செயல்கள் நிகழ்தற்கும் இடனாய், நின்று விளங்கினர்.

பண்டு **சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறை** என்னுஞ் சேர மன்னன் ஒருவன் இருந்தான். அவன் இயல்பாகவே தவத்திருவுடையனாய், அத் தவச்சுடர் தன்னைச் சூழ்ந்து கதிர்விட் டொளிரத் திகழ்ந்திருந்தனன். சேரமான்பால் சுடர் வீசிய தெய்வ வொளியினை அவன் காலத்தவர் பலரும் அறிந்து, மகிழ்ந்து, " நல்லாரைக் காண்பதுவும் நன்று " என் றருளிய ஔவையாரதம் அமுதமொழிக் கிலக்காக

அவனைக் காண்டலள்வானும் நலன் பல எய்தி வருவா ராயினார். அஞ்ஞான்று நரிவெரூஉத்தலையார் என்னும் புலவரொருவர் ஏது காரணத்தாலோ தம் உடம்பு வேறு பட்டிருந்தார். சேரமான் விழுப்பத்தை யறிந்து பய னெய்தி யிருந்தவருள் ஒருவர், இப் புலவரின் வேறு பாட்டு நிலைக் கிரங்கி, அவரை நோக்கி, 'ஐய, நீவிர் ஒள் வாட் கோப் பெருஞ்சேரலிரும்பொறை என்னுந் தவச் சான்றோனைக் காணப் பெறுகுவிராயின், அக் காட்சி யளவே நும் மேனி வேறுபாடு நீங்கப்பெறுவி'ரென் றுரைத்து அவன்பால் அவரை ஆற்றுப்படுத்துதலும் புல வர், கூறியவாறே சென்று,

எருமை யன்ன கருங்கல் லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும !

என வியந்து கூறுவோராய் அவ் விழுமியோனைக் கண் டார். கண்டலும், அவர் தமதழகிய பழைய உடம் பினை யெய்தப்பெற்று இன்னல் தீர்ந்து அளவிறந்த விம்மிதமுடையராயினார். பின்னர் அச் சேரமானற்ற றவ மேன்மைக்கு மகிழ்ந்து, அவன் அத்தகையோ னாகலின் அவன் பெற்றிருக்கும் அரசத் திருவினால் அத்தவநலங் கெடாது மேலுமேலும் விழுப்பமுறுமாறும், வாழ்க்கை யிற் பலர்க்கும் பயன்படுமாறும்,

அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி ;
அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே.

எனப பேரனபோடு செவியறிவுறுததி அவனபாற பிரியா விடைகொண டேகினா. பிறகாலததிலும இஙஙனமே திருஞானசமபநதா திருவருட்டிறததால், அறுபானமுமமை நாயனமாரு ளொருவரான நெடுமாறனை எனனுங கூனபாண்டியன தன உடமபு வேறுபட்டுக் கூனுகி யிருநதது மாறி நலனுடம பெயதியதும், கொலலிமழுவன புதலவி முயலகன நோய தீர்ந்ததும ஈணடு நினைவுகூர றபாலன.

தெயவததனமை வாயநதார்தம ஆணைவழி நடைபெருதது உலகில யாதிருககினறது ? பெரிய விலஙகுகளும நசசுப பூசசிகளும உயிரறற பொருள்களுங கூட அவர் கருதிய வழியெலலாம தம இயறகைத தனமையும மாறியமைநது இயஙகாநிறகினறன. திருநாவுக்கரசு நாயனுா காலததில அவர்மேற பலலவ அரசனுல ஏவபபட்ட பெரிய மதயானையானது அவாக்கு வயமாகிப் பணிநது நினறதும, நஞ்சு அமுதமானதும், கல தெபபமானதுங் கேள்விபபடுகினறோம. சங்க காலததிலும இஙஙனந தவததான மாட்சிமைப்பட்ட முனிவராககு யானை முதலிய விலஙகுகளுஞ் சிறறுயிா களுங கல முதலிய உயிரில பொருளகளும வயமாகியும இயலபுதிரிநதும இயஙகியகாட்சிகள் பலவாகும. பததுப பாட்டுள ஒனருகிய **பெரும்பாணுற்றுப்படையின** இறுதியில, தவமுனிவரா இருககையிற, குரங்குகள அஙகு விழுஞ செததைகளை அபபுறபபடுத்தி இடததைத தூயமை செயதலும, மானும புலியுந தம இயலபு மாறி

ஒருங்கு துயில்கொள்ளலும், யானைகள் அவர் செந்தீ வேட்டற்கு விறகுகள் கொணர்தலும்,

" மந்தி சீக்கும் மாதுஞ்சு முன்றிற்
செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங் கருவிய மலை "

என நுவலப்பட்டிருக்கின்றன. இதனுரையில் நச்சினார்க்கினியர், "மந்தி சீத்தலும், மாத் துஞ்சலும், களிறு விறகு தருதலும் இருடிகளாணையால் நிகழ்ந்தன வென்றுணர்க" என்றுரைக்கின்றனர். இங்ஙனமே,

" கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே "

என வரூஉம் புறநானூற்றடிகளும், "கானயானை தந்த விறகென்றது, இவன் தவமிகுதியான் அதுவும் ஏவல் செய்தல்" என வருகின்ற அவற்றின் உரையும் நினைவு கூரற்பாலன.

கடையெழு வள்ளல்களி லொருவனாகிய ஆய் அண்டிரன் என்னும் பொதியின் மலைத் தலைவன் சங்க காலத்தில் விளங்கிய சிறந்த சிவனடியாருள் ஒருவனாவன். இவனரண்மனையிற் ... இவனருட்டிறத்தில் ஒரு பாம்பு இவனுக்கு நீக்க கட்டுண்டிருந்து ஒருகால் கலிங்கமொன்றைக் கொணர்ந்து கொடுத்ததென்றும், மிக அழகிதான அவ்வுடையைச் சிவத்தின் மாட்டுத் தான் வைத்திருந்த பேரன்பினால் ஆண்டு விளங்கிய சிவபிரான் றிருமேனிக்குப் போர்த்து

மகிழ்ந்தன னென றும வரூஉம ஒரு குறிப்புச் சிறுபாணாற் றுப் படையில,

" நீல நாகம நலகிய கலிங்கம
ஆலமர் செலவாக் கமர்ந்தனன் கொடுத்த
சாவந தாங்கிய சாந்துபுலா திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆய் "

என் றிசைககபபடுகின றது.

முறகாலததில உறையூரினகண வைகியிருந்த **பொத்தியார்** எனனுந தனனலமறற பெருமபுலவர், கோபபெருஞ சோழன எனனுந தவவேநதனபால நட் புடையராயிருநது அவன ஒரேதுப பறறி வடககிருந்து உயிாநீதது நடுகலலாகியது கண்டு ஆறறுராய்ப பெரி திரஙகி நைநது, தாமும ஆண்டு வடககிருத்தறகு அக் கல்லுருவாகிய சோழனை இடஙகேடடாா. உடனே அக கல், நிலம் புதைநதவாறே ஒதுஙகிப் பக்கலில் இடம நலகப் பொத்தியாா இக கணகணட அருணிகழச் சிககு மிக வியநது,

" பலாக்குநிழ லாகி உலகமீக கூறித்
தலைபபோ கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்
இடஙகொடுத் தளிப்ப மன்ற ; உடமபோடு
இன்னுயிர் விருமபுங் கிழமைத்
தொனனட் புடையார் தமமுழைச் செலினே "

எனச் செநதமிழ பாடித தமதரிய நல்லுயிரினையும் அப் பெருஞ்சோழனமாட் டுயதது அழியா நிலை யெய்தினர். சைவ சமயாசிரியா காலததில, நம்பியாரூரர் இங் நில

வுலகினின்றும் மறைந்து திருக்கயிலை சென்றது கேட்டு அவரோடு பெருங்கிழமை பூண்டு விளங்கிய சேரமான் பெருமாணயனூர் தாமும் இம்மண்ணுலகு விடுத்து உடனே கயிலை சேர்ந்தெய்தினரென்னுந் தெய்வ நிகழ்ச்சியினையும் இது நினைவுகூர்விக்கின்றது.

திருவிளையாடற்புராணத்தில், பார்வதியார் மதுரையில் வேள்வித்தீயில் தடாதகைப் பிராட்டியாராகத் தோன்றியருளிய அருநிகழ்ச்சி நுவலப்படுதலோடொப்பச், சங்க காலத்திலும் **இருங்கோவேள்** என்னுங் குறுநில மன்னன்றன் குலமுதல்வர் தவச்சிறப்பு வாய்ந்த ஒரு முனிவரரது ஓமகுண்டத்தினின்று தோன்றிய அருநிகழ்ச்சி, புலனழுக்கற்ற அந்தணாளரெனப் படுந் தெய்வப் புலவராகிய **கபிலர் பெருமானால்**,

> "நீயே, வடபான் முனிவன் தடவினுள் தோன்றிச்
> செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
> உவரா ஈகைத் துவரை யாண்டு
> நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
> வேளிருள் வேளே"

எனச் சிறப்பித்து ஓதப்பட்டிருக்கின்றது.

மண் புனல் அனல் முதலிய ஐம்பெரும் பொருள்களும் பிறவுந் தெய்வத்தன்மை மிக்கார்பால் தம் இயல்பு வேறும் என்பதற்கு, நந் தமிழ் நாட்டில் முன்னும் பின்னும் எத்தனையோ வகையான அருநிகழ்ச்சிகள் நிகழ்ந்திருக்கின்றன. அப்பர் பெருமானை ஒருகால் பல்லவ மன்னன் அவர் மெய்ந்நிலை யறியாது நீற்றறையி லிடு

வித்துத் தீக்கொளுவ, அவர்க்கு அப் பேரழல் ஓரினிய தண்ணறும் பொய்கையாய்க் குளிர்ந்து தோன்ற அவர் அதன்கண் ஊறின்றி விளங்கினாரென்பது, திருத்தொண்டர் புராணத்தானும் அப்பர் வாய்மொழியானுமே அறியப்படுகின்றது. இங்ஙனமே, கடைச்சங்க காலத்தின் இறுதியில், ஆதிரை யென்னுங் கற்பினல்லாள், கடன்மேற் சென்ற தன் கணவன் கலங்கவிழ்ந்து மாண்டனனென்று அவனுடன் கலங்கவிழ்ந்து உயிர்தப்பித் திரும்பிய சிலர் சொல்லக் கேட்டு, யாதும் நிலைகொள்ளாது அலறித்துடித்து உடனே தீ மூட்டுவித்துஅதன்கண் இறங்கலும், அவள் கணவன் உண்மையில் உயிர் மாளாது ஒரு தீவின்கண் ஒதுக்குண்டிருந்தமையின், கொழுந்தோடிச் சுடர் வீசி யெரிந்த அத் தீ அவட்கு ஒரு குளிர்ம்பொழிலாய்த் தண்ணென்றிருந்து யாதும் ஊறு செய்யாதொழிய அவள் அதன்கண், செவ்வென்றிதழ் விரிந்த செந்தாமரைத் தவிசில் அகமலர்ந்து வீற்றிருக்குந் திருமகள்போல இனிது விளங்கினளென்பது,

"முட்டீ விளக்கின் முளியெரி பொத்தி
மிக்கவென் கணவன் வினைப்பய னுய்ப்பப்
புக்குழிப் புகுவே னென்றவள் புகுதலும்,
படுத்துடன் வைத்த பாயற் பள்ளியும்
உடுத்த கூறையும் ஒள்ளெரி யுறாஅது
ஆடிய சாந்தமும் அசைந்த கூந்தலிற்
சூடிய மாலையுந் தொன்னிறம் வழாஅது
விரைமலர்த் தாமரை யொருதனி யிருந்த
திருவின் செய்யோள் போன்றினி திருப்ப"

எனக் கடைச்சங்க காலத்துப் பெரும்புலவரான சீத்தலைச் சாத்தனார் தமது **மணிமேகலை** **துறவில்** விளங்க உரைத்தலாற் றுணியப்படுகின்றது.

பிற்காலத்திற் பட்டினத்தடிகள் வரலாற்றில், அவர், தமக்குத் தம் தமக்கை தந்த நஞ்சு கலந்த அப்பத்தை அதன் நிலையறிந்து அவள் வீட்டினமே லெறிய, அது தீயுருவாகி அவ் வீட்டை அழலப் பற்றச் செய்ததெனனும் நிகழ்ச்சி உரைக்கப்படுதல் பலாக்குந் தெரிந்ததொன்று ; இங்ஙனமே, பண்டு, கடைச்சங்க காலத்தினிறுதியிற் கண்ணகி தன் இடக்கொங்கையைக் கையாற் றிருகி மதுரைமா நகர்மேல் விட்டெறிய, அஃது ஊழித் தீயெனப் பெருகிப் பற்றி அந் நகரை அழித்தொழித்த அருஞ்செயலை மறப்பாரும் மறுப்பாரும் யார் ?

இத் தெய்வ அருநிகழ்ச்சிகளை யொப்பவே, அக் காலத்துக் கற்புடை மங்கையர் தந் தெய்வத்திறனாற் செய்த அருஞ்செயல்கள் எண்ணிறந்தனவும் பேராற்றல் வாய்ந்தனவுமாகும். ஒருத்தி வன்னி மரமும் மடைப்பளியும் இயங்கச் செய்கின்றனள் ; ஒருத்தி, நீரலைகளை ஓரெல்லையில் இருத்துகின்றனள் ; ஒருத்தி தன் கணவனைக் கடல் நீர் அளிக்கப் பெறுகின்றனள் ; ஒருத்தி தன் காதலன் பிரிந்தவிடத்துக் கல்லுருவாகிப் பின் அவன் திரும்பி வந்துழி முன்னுருவம் பெறுகின்றனள். ஒருத்தி இறந்த குழந்தையை உயிர்ப்பிக்கின்றனள். ஒருத்தி தன் கணவன் பிரிவில், வேறொருவன் தன்னை உற்றுநோக்குதல் கண்டு, தன் அழகிய திருமுகத்தைக் குரங்கு முகமாகுக வென உருமாற்றிக் கொண்

டிருந்து கணவன் திரும்பியபின் தன்முகம் எய்துகின்றனள். சிலப்பதிகாரத்திற், பொய்யாச் செந்நாவும் விழுத்தவமும் படைத்த ஆசிரியர் இளங்கோவடிகளே இவ் வருஞ் செயல்களையெல்லாம் நன்கெடுத்துக் காட்டுகின்றனர்.

கடைச்சங்க காலத்திற், பெருங் கொடையாளனும் வயங்கிய வேள் பாரியின் புதல்வியரு ளொருத்தி, மழையில்லாத வறட்காலத்தில் இரந்து வந்த பாணனொருவற்கு உடனே உணவளித்தற்கில்லாது தயங்கிப், பின்பு, உலையிற் பொன்பெய்து சோறாக்கிப் படைத்தன ளென்ப. இவ் வருஞ்செயல்,

> " மாரியொன் றின்றி வறந்திருந்த காலத்துப்
> பாரி மடமகள் பாண்மகற்கு—நீருலையுட்
> பொன்றந்து கொண்டு புகாவாக நல்கினாள்
> ஒன்றுறு முன்றிலோ இல "

எனப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான பழமொழி நானூற்றின்கண் நுவலப்படுகின்றது.

சங்க காலத்திற் பிசிராந்தையார் என்னுந் தவவாழ்வினார்தந் தெய்வ நிகழ்ச்சிகளும் பெரிதும் நினைவுகூர்ந்து இன்புறற்பாலன. நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்குக் கூற்றங் குதித்தலுங் கைகூடும் என்னுந் திருவள்ளுவர்தம் பொய்யாமொழிக் கிணங்க, யாவதும் நரை திரை யின்றி நீடிய காலம் அவர் உயிர்வாழ்ந்த தவத் திறனும், பாண்டி நாட்டின்கண்ணதான பிசிர் என்னுந் தம் மூர்க்குச் சோழநாட்டு உறையூர் நெடுந் தொலைவு இடையிட்டதாயினும் அவ் வுறையூரின்கண்

உறைந்த தம் உயிர் நண்பனான கோப்பெருஞ் சோழற்கு ஆண்டுற்றதோ ரிடையூற்றினைத் தாம் உடன் தெரிந்துகொண்ட ஞானக் காட்சியும், சோழன் தன் தல்லற்காலையில் அவரைத் தன்னருகிற் காண எதிர் நோக்கியவாறே உடுக்கை யிழந்தவன் கைபோல அவர் அந் நெடுந் தொலைவு கடந்து வந்து அம் மன்னன் செயலிற் கலந்துகொண்ட துறவுப் பேறுமாகிய தெய்வச் செயல்கள் நினைதொறும் பெருவியப்பும் விம்மிதமுந் தருவனவாம். அஞ்ஞான்று இவ் வருணிகழ்ச்சிகளைக் காணும் பெருந்தவமுடையராயிருந்த சான்றோரும் இங்ஙனமே வியப்பும் விம்மிதமுங் கொண்டு,

"நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
எனைப்பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணிதல்
அதனினு மருட்கை யுடைத்தே பிறனாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி
இசைமர பாக நட்புக்கந் தாக
இனையதோர் காலை ஈங்கு வருதல்;
வருவ னென்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவ னறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே"

எனவும்,

"பொன்னுந் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப"

எனவுந் தம்மைமறந் துரைப்பாராயினர். இவ் விழுமிய
தவஞானச் செய்யுட்கள் **புறநானூற்றி**னகட் காணப்படு
கின்றன. இங்ஙனமே **பாண்டியன் பல்யாகசாலை முதுகுடு
மிப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி** முதலி
யோர்தம் புண்ணியத் திருவும் பிறவும் நினைவுகூர்ந்து
மகிழ்தற்குரிய அருமைப்பாடுடையனவாகும்.

இனித், திருஞானசம்பந்தர் அப்பர் முதலிய பிற்
காலத் தெய்வ ஆசிரியன்மார் தேவாரச் செந்தமிழ் பாடி
இறந்தவரை உயிர்ப்பித்தலும், தீயோரை இறப்பித்த
லுஞ் செய்த அருஞ் செயல்களோ டொப்பச், சங்ககாலத்
திலும் செந்தமிழ்ச் செய்யுளிசைத்துச் செய்த அரு
நிகழ்ச்சிகளும் பலவாம். கற்குந்தோறும் பொருணுட்
பங்களும் ஓசை யினிமையும் மொழிச்செவ்வியும் எதிர்ந்
தினிக்குந் தெய்வச் செந்தமிழைத் தீதென்றிகழ்ந்த
'**குயக்கொண்டா**' னென்னுங் கயவனொருவனைக் கடைச்
சங்க காலத்துப் புலவர்தலைவரான **நக்கீரனார்** ஒரு மந்திரச்
செய்யுள் கூறுமுகத்தால் இறப்பித்துப், பின் அதனையே
வேறு வடிவின் மாற்றிக்கூறி உயிர்ப்பித்த அருநிகழ்ச்சி
யும், **இருங்கோவேள்** என்னுங் குறுநில மன்னன்றன்
முன்னோருள் ஒருவன் **கழாத்தலையார்** என்னுந் தெய்வப்
புலவரைப் பொருள்செய்யா தொழுகி அவரால் இகழ்ந்
துரைக்கப்பட்டுத் தனது 'அரையம்' என்னும் ஊர்
அழிந்து பாழ்பட்டுப்போன அருஞ்செயலும் அத்தகைய
சொல்லாணை விழுப்பங்கட்கு உறுபெருஞ் சான்றுக
ளாகும். 'சிற்றரையம்' 'பேரரையம்' என இருகூறு
பட்டுக் கிடந்த மிக வளவிய 'அரைய' மென்னும் அந

நகா கழாத்தலையார் சொல்லம்பினால் அழிந்துபட்ட உண்மை **கபிலர் பெருமானால்**,

" இருபாற பெயரிய உருகெழு மூதூர்க்
கோடிபல அடுக்கிய பொருள்நுமக் குதவிய
நீடுநிலை அரையததுக கேடுங் கேளினி ..
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழநததன் பயனே "

எனப **புறநானூற்றில்** எடுத்துக காட்டபபடுகின்றது.

**ஔவைப் பிராட்டியார்** ஒருகாற சேரமன்னனொருவனபாற சென்று அவனை நனகு மதிககபபெறறு மகிழ்நது, " சேரா உன்னுடு பொனனுடு " என வாழத்துரைதது அவன நாட்டை வளமுற எடுததருளிய நறு நிகழசசியுங கருததிற பதிககறபாலதாகும்.

சஙககாலம இஙஙனம பறபல அருஞ்செயலகளாகிய மெய்யுணர்வாறறலால் விழுப்பம மேவி விளஙகினமையால், எககாலும் இப் புண்ணியத தமிழகம **தெய்வத் தன்மை** வாய்நது விளஙகி வருகின்ற தெனபது.

# குறிப்புரை

[எண் - பக்கவெண்]

க. உணவு

1. முதற்று - முதலாக வுடையது உணவின் பிண்டம - உணவினுலை திரண்டவடிவு; என்றது, உடம்பு.

2. மழலை - இளஞ் சொல. பொருமுகின்றனர்-விம்மி யழுகின்றனா. நறுவிய - நலல. குமரி வாழை - ஈனுத இளம வாழை.

3. உண்ணு-உள்நா. துழந் தும-துழாவியும. விதிாத் தும - சிநதியும. குரல-கதிா. யாணர் - புதிய வருவாய். உண் மாா-உண்ணுதறகு. புன் கம - சோறு.

4. கூதளம - ஒருவகைச் செடி. குளவி - மலைமல லிகை. கோள் - குலை. ஊராக்குதிரையெனறது, குதிரை என்னும மலை முளி - முறறிய குய - தாளிபபு கமழ-பரகக.

அமா - விரும்பிய இன் - இனிய. படிவ நோன்பியர்-'விர தியா'.

6. மிடிப்பட்ட - வறுமைப் பட்ட.

7. சிகை-கவளம். இரவு- இரததல.

8 கூல வாணிகர் - தானி யம பருபபு முதலியன விற்போர். வயிறு காய் - வயிறு உலறும.

10. வடக்கிருததல - வாடி உயிா நீஙகுதல. உயிா பதிபெயர்ததல-உயிரை அதனிடததிலிருந்து நீக்கு தல ; அதனிடமென்றது, உடமபு. இமயத்துக் கோடு - இமயமலையின் உசசி இசை - புகழ். நட்டு-நிலைபெறச் செய்து. தவத்தலை - மிகவுஞ் சிறந் தது. ஊறு - இடுக்கண்.

11. மா-விலஙகு. செய்தி- தொழில. கரு - கருப் பொருள்கள்.

13. வசிதரொழில-மழைத் தொழில. தலைபபெயத - பெய்த; களி மிதவை - குழைந்த குழையல. அமலை - திரளை. நிரை - வரிசையான. ஞெமிரி - பரபபி விளககுறுதது - விளககி; தொடரி - தூககி.

14. அழறகோடு-Equator

15. பொருட் கரு - முதற பொருள்கள வடாது - வடக்கின் கண்ணது. குமரி-குமரியாறு தொடு- தோணடபபட்ட. குணககு - கிழககு. தொனறு முதிர-பழையதாய முதிர்ந்த குடககு - மேறகு.

16. பைஙகூழகள் - பயிர கள். செந்நீர-இரததம. முதலுணு-Protein.

17 உணவின - நெலலின். குமரி மூத்த கூடு - அழியாத தனமை வாயந்த முதிரநத நெற்கூடுகள.

18 மாநதி-பருகி. விடாய த்துமட-நீர வேட்கை யெடுத்தும

23. நாலவகை யமிழதம - உண்டல, பருகல, தின்னல, நககல உணவுகள்.

24. ஊட்ட வகை - முதலுணு கொழுபபுணு முதலியன. உயவுறை வகை- ஆறறல உயவுறை,வீறறு உயவுறை முதலியன. சுவை வகை, அவறறை நாவுககினியவாயத துவர்பபு காரபபு முதலிய சுவைகள் முதிரத தெரிநது கலகக உணணு முறை.

விழுநீர-கடல. நிவநது - உயாநது சிறியிலை-சிறிய இலை. வெதிர - மூஙகில. மா - மாமரம.

25. கயம-நீரப பாஙகான பள்ளஙகள. வறததின - நீர வறடசியால கருமபின - கருமபைப போல. ஒலிககுநது - ஒலிககும; தழைககும. கொணடல கொணட நீர-மழையாற கொண்ட நீர் கணணன்ன - மகளிர கணகளைப் போல. பூக்குந்து - பூககும் கருங காலு - கரிய தாளையுடைய. மலரின - மலர்ந்தால. வீ - அம மலரை. மணி - நீல மணி. வரைப படபபை - மலைப் பககததையுடைய. நாஞசில - நாஞசில மலை. மணணுபபு - சுணண

வகைகள் குமரிக் கோடு- குமரி மலை தொடலைகள- மாலைகள.

26. ஓஙகல - மலை. வான சோறு - உயாவகையான சோறு அதா - வழி கலிதது - ஆரவாரிதது

27. நெடுநீர - மிகக நீரை யுடைய. நெய வழஙகி யும-நெயயைக கையாணடும

28. அடடு - காயச சி. பயிலவு - பழககம.

29 புலலிலை வஞசி-சிறிய இலைகளையுடைய வஞசி மரம. மரததின பெயா ஆகுபெயரால நகாககான மையின், புலலிலை யென னும அடைமொழியை மரத்துககு மடடுங கொளக. இஃது அடையடுதத ஆகுபெயா. அடையடுதத ஆகுபெயர்ககும அனமொழித தொகைககும உளள வேறுபாடு இத தொடரினகணநனகு விளஙகி நிறறல கருத்திற பதிக்கறபாலது. கல என் - கல எனறு ஆரவாரிக்கும. ஆஙகண - அப பககதது

செறுதத - பல பொருள் களையும அடககிய.

30. வெபபுள - வெமமை. விளைநத-முதிாநத. சுவல- மேடடு நிலம. கலிதத - மிகுநத பெருமபாடடு - பெரிய செவவியை யுடைய. பூழி - புழுதி மயஙக - கலகக. பலலி - தாளி யெனனும ஒரு கருவி கழாலின-களைத லால. தோடு ஒலிபு நநதி- இலை தழைததுப பெருகி. கடுபப - ஒபப. பீள் - சூல். வாலிதின - சிறியதாக கவவை-எளளின இளங காய. விளாக காய-வெள் ளைக காய கோள் பத மாக-அறுககுஞ செவவி யாக.

பழுனிய - முற்றிய. பகா நது - பகாநது கொடுக்க. விசைபப - துளள பெருந தோள் - மனைவி தாலம - உண்கலம பூசல மேவர - கழுவுதலைப பொருநத யாணாதது - புதுவாயினை யுடையது.

31. செவி யறிவுறீஇ - செவியறிவுறுதது. செய்க் கடன் - நிலவரிக கடன் இறையிலியாக - வரியில லாத மானியமாக. நநதா - அவியாத. இசைதத - இனிமையாகசசொலலிய

32. முறை - அறம உறை - மழை. கொற்றம-வெற்றி. காவலா - அரசர். புரை மொழி - பிழைமொழி. புறநதருகுவை யாயின் - பாதுகாபபையாலை.
வாரி - வருவாய். கண் அகல - இடம அகனற. நறகு - நனகு
33. நொதுமலாளர் - அயலாா; ஈண்டுக கோளுரை கூறுந தீயோர் பொது மொழி - சிறபபிலலாத மொழி; எனறது, புனமொழி. பகடு - ஏரெனனும பொருட்டு. பாரம-பரிக்கபபடுதற்குரிய குறை அடிபுறநதருதல-அடிபோறறுதல.
உயிர்பபுடன - உயிாபபுத் தன்மையுடன்.
34. மணிக்கலம-கணணுடிஏனம.
35. ஒபபுரவுப் பொருளாய-மரியாதைப் பொருளாய். மறவுணர்வு-அறவுணாவலலாதது.
36. புறபபுண - முதுகுபபுண். வடககிருநது - படடினியால வாடியிருநது கையறு நிலைச செயயுள - இறந்தாரை நினைந்து செயலறவு உடையராய் வருந்திப் பாடுகின்ற செய்யுள.
இரு கண் குழிசி - பெரிய உளளிடததை யுடைய பானை. இழுது - வெண்ணெய கடைதலை. மறபப- ஒழிய எனனும பொருட்டு. ஓதை-உழு தொழிலால உணடாகும ஓசை. 'தேறலைச் சுற்றம யறப்ப, ஓதையை உழவர் மறப்ப' என்க.
37. மூரி வாய முறறம - வரையாமற சோறு வழங்குதலால முரிநதுபோன வாயிலையுடைய முறறம. குய குரல - தாளிபபு ஓசை. துவை - துவையல. பன்மலாப் பூத் ததுமபின- பல மலராகிய பூககள நிறைநதன.
புறவு - குறுஙகாடுகள். ஆயததான் - ஆத் திரளோடு கூடி. குறுமபு - சிறறரண்கள்.
38. கால - காற்று. கலன - மரக்கலம நிலைக்குநது - நிலைக்கும
கொள்ளை - விலை. உமண் - உபபு விற்கும இனம. ஒலிககுநது - ஒலிககும; தழைககும.

38 வியர்பபு - வியர்வை. முயறறு - முயறசி யுடைமை கூழ - சோறு. அடு தீ - சமைககும நெருபபு. சுடு தீ - பகையரசர் ஊரைச சுடுந தீ. இரு மருநது - சோறும நீரும

39. இநதிரர் - தேவா தமியர் - தமியராய.

40. மன் - கழிவுப் பொருளில வந்தது வீழந தனறு - வீழநதது. நிறம- மார்பு.

41 துரீஇ - துருவி. அவிழ- சோறு. திடடை - திட்டு; மேடு.

42. படைபபு - பேறு. தன்னேடு சூளுறுதலாவது, தாம உணடாலன்றி யாம உணணேமெனை உறுதி கூறிககொள்ளல. உணமென - உண்ணு மென.

தவ - மிக என்னுள - எனறு கருதாளாய். மகடூஉ - பெண

43. அடடிற சாலை - சமையற கூடம. வாககிய - ஒழுக்கிய ஓவதது - ஓவியங்களை யுடைய

44. புகா - உணவு.

46. புணரியோர் - கூடினோ. படைத்திசினோரே - படைத்தோரே உயக்கும - செலுத்தும்.

47. தொடி - பூண. கருனைகள் - பொறியல, வறை, கூட்டு முதலிய கறிகள்.

48. வெள்ளயிா - வெண மணல.

அணில வரிக கொடுங் காய் - அணிலின வரிபோலும வரியையுடைய காய்; என்றது, வெளளரிககாய். காழ் - விதை. விளர் - வெண்ணிறமான உருககு - நெய் வேரி - தேன்.

49 வீழ் - விழுது. விழுதில லாத தாழை யெனறது, தெனனை. அதன இளை தான இனிதத நீர் 'குழவித தீ'ீா' எனப்பட்டது. சேதா - செந்நிறப் பசு.

49. பைஞசேறு - சாணம. படிவ நல நகா - வழிபடுந் தெயவத் திருவுருவஙகளை யுடைய நலல இலலம. சேபபின - தஙகினைல.

50. சுடாக கடை - ஞாயிறு பட்ட மாலைப் பொழுதில. வததம - சோறு உருபபு - வெமமை. போழ - வகிா. கறி - மிளகு கஞசகமுறி - கருவேமபின் இலை; கொககு எனறது, மா

மரம். வடி - வடு. விதிர்த்த - பலவாகப் போட்ட. காடி - ஊறுகறி.

52. விடரகத்து - மலைப் பிளவிடத்து; அருமிசை - அரிய உச்சி. குறியாது - பெறுதற்கரியதென்று கருதாது. ஆதல் - ஆதன்ற பெறுகின்ற பேறறிவே.

54 துவர - மிக.

55 பெயாத்துரை - மீண்டும் எடுத்துரைக்கும் உரை. யாப்புறுத்தல் - வலியுறுத்தல்

56 பகல - பகற்போது உடன் - சேர. இவ்வடி, மாதக்கணக்கான பட்டினியை உணர்த்திற்று

உ. உடை

57. சாரணா - தொண்டர்

59. வளாகம் - உலகம். கடுமா - விரைந்த செலவினையுடைய விலங்குகள் பாாக்கும் - வேட்டையாடக் கருதிச் செல்லும்.

60. அவ்வை - தாய். வை - கூரிய.

67. கலை - அழகு.

ஆக்கமொடு - ஆக்கச் சொல்லோடு

68. சேறலே - செல்லுதலே.

69. மணி நீர - நீல மணியின் நிறத்தை யொத்த ஆழ்ந்த நீர்; அகழி. அணி நிழல - குளிர்ந்த நிழல.

72 வட்டு - சிறிய இடுப்புடை படாம் - மூடுதுணி. பரிவட்டம் - அடையாள உடை

74. சீரை - மரவுரி; தைஇய - உடையாகச் செய்த உரிவை - தோல். தை இய - கட்டிய. ஊன - தசை.

75. உடுக்கை - உடை வாலாமை - தூய்தன்மை. அரை - தாள். அலங்கு - அசைகின்ற. பூலை - பஞ்சு. புடை - ஈண்டு அக்காயின முதுகு

பருத்தி வீடு - பருத்தியின் சுகிர்ந்த பஞ்சு. மூடை - மூட்டை

'சோறமைவுற்ற நீர்' என்றது, ஆடைக்கு இடுங் கஞ்சி.

காம்பு - மூங்கில். சொலித்தன்ன - அதன் உள் தோலை உரித்தாற் போன்ற.

76. சுகிர்தல் - ஆய்ந்தெடுத்தல் நீர்மை - இயல்பு. பொலம் புரியாடை - பொன்னிறத்தான மிக்க ஆடையை யுடையாய்; இங்ஙனம் அண்மை விளி

யென்பா இதனுரையாசிரியர். வலம்புரி வண்ண - சங்கின நிறத்தையுடைய பலராமனுய வநத திருமாலே.

77. மணி-நீலமணி; பாடு-தோன்றுதல. இருஞ்சூல-கரிய சூல கொணட மேகம புரையும-ஒககும மா மெய - கரிய மேனி. மணியும முநநீரும முகிலுமென மூனறும ஒக்கும மேனி எனறபடி அக் கரிய மேனியொடு நிறத தால மாறுபடட பொன னிற உடையினை யுடையை எனபது அடுத்த வரியின பொருள.

ஒலியல-மாலை ; கடபப மாலை உருவத தீ-எரிந்து தோனறுதலையுடைய தீ

78. கல-காவிககல படிவப பாரபபான - விரதஙகளை யுடைய அநதணன.

செயலை-அசோகு. துயல வரும - அசையும. தகர் - ஆடு.

மருங்கில - இடுப்பில. நிலன நோபு - நிலததிற பொருநதுமபடி.

79 சரிநது - சரிய. இன் குரல தொகுதியோடு - இனிய மிடறறையுடைய பாடு மகளிரோடு குறும பொறி - அரைக கட்டு. இயல - அசைய. தலைத் தநது - முதறகை கொடுத்து தன - தனககு; முருகனுககு. நினற - நிலை நினற.

80 ஐநதாடடை - ஐந் தாணடுடைய கன்மாப பலகை - தகுதி தெரிககுந் தெயவப பெருமை வாயநத பலகை; (கன - நிறுக்குந தட்டு)எனறது, சஙகப பலகை. இரிஇ - இருததி. வாாநது - ஒழுகி. ஆரபபெடுதது - ஆரவாரஞ செயது.

81. தெறுதல - அழிததல.

82. அரததம - செமபடடு அணி பழுபபப பூசி-அணி கலனகள நிறமாறுமபடி செஞசாநது பூசி சிரததை யால - கருததோடு. நொயய - மிக மெலலிய

83. துகில முடிதது-மயிாக் கடடு கடடி; எனறது, தலைபபாகை கடடி. போர் தத - சடையிடட தூங் கல - தூகக மயககம பெருமூதாளர் - மெயகாப் பாளா. ஏமம - காவல.

84. சஞசயன் - பெயா. தலைககிடு - தலைபபாகை.

கஞ்சுக முதலவர் 'சட்டை யிட்ட பிரதானர்' எனபர் சிலப். அருமபதவுரை காரா. சேய் உயா-மிக வுயர்ந்த. வாயிலோர் - வாயிலின் கண வந்துள் ளோர.
மததிகை -புரவியை யடிக கினற சமமட்டி. வளை இய-வளைநதுகிடககினற. மறிநது - உடையின வடி மபு தாழ்ந்து. மெயபபை- சட்டை. வெருவருப-அச் சந் தரும. வன்கண-தறு கணமை.
படம-சட்டை உழையராக- அருகிற சூழநது திரிய.
இரவு பகற செயயும - இர வைப பகலாகச செயயும. விரவு-நிறம விரவின

3-கல்வி

86. ஒட்பத்தை - விளக் கததை.
87. உறறுழி -ஆசிரியாககு ஓருறுபாடுற்றகாலததில. உறு'பொருள - மிகக பொ ருள. பிறறைநிலே-பின நின்று வழிபடும நிலே. முனியாது-வெறுககாமல.
மலர்தலே-பெரிய இடததை யுடைய. செறுத்த - பல பொருளகளேயும அடக் கிய வெறுத்த கேள்வி — மிக்க கேள்வி. நன்றுமன்- மனகழிவின்கண் வந்தது.
88. ஒட்பம-அறிவுடைமை கழிய-மிக. நாடடாமால ஊராமால, ஆல அசை. என-ஏன் ?
89 பட்டாஙகு - இருந்த வாறே.
வழக்கு-உலகவழக்கு.மு தலின-அடிபபடையிலை. சிவணிய - பொருநதிய. நிலததொடு-நிலததுவழக் கோடு புலம - அறிதற் குரிய இலக்கணங்கள். போககு-குற்றம.
91 தலேககூடி - கூடி. உளள - நினேய பிரித லனேத்து - பிரிதலாகிய அத்தனமைதது.
94. வால-ஒளிபொருநதிய பொதி - கட்டு காலே - காலம மயஙகியோா - அறிவுமயஙகியவா. நுஙகியதுபோல -விழுங்கி யதுபோல. படுசுடர் - மறைகின்ற ஞாயிறு கல- மேற்குமலே. இவர-பரவ. ஏாதர - எழ. பாயல - துயில. நநத - விளஙக. வெதிா-மூஙகில. பாாப்பு- குஞ்சு. உள்ள - நினேக்க. மனறு - தொழு. மா - விலங்குகள். வதி - வதியு

மிடம். அயாநது - மாலைக் கடன் செய்து

98. வளிநுழையும வாய - சாளரம.

அகவ - ஒலிகக. வியல ஆவணதது - அகன்ற கடைத் தெருவினையும்

மலைத்தலைய-மலையினிடத்தே தொடககததையுடைய. கடற காவிரி - கடலிடத்தே செலகின்ற காவிரி. கார-பசிய. செறுவின்-வயலகளில நின்ற. புலத்தாங்கண - நிலபபகுதியில. காய் - காயததலையுடைய. மோடு - பருத்த வயிறு. முழுககுழவி - இளங கனறுகள். கூடு - நெற்கூடு

ஆற்ற-மிக.

99. ஆரா இயற்கை-ஈண்டு, அமையாத இயலபு.

அருளனமாறு-அருளுதலால்

இயலமுகு - இலககணச் செமமை. அவைதமமின் செலகை.

100. பொதநிட்டு - துளை செய்து. ஆராமை - ஈண்டுத், தெவிட்டாமை.

4. பழக்கம்

101 வகுநது-வகுத்து.

102. கதுவல-பற்றல.

அளிது-அளிக்கத்தககது. பெறலருங குரைதது - பெறலரியது

103. ஆறு - அமையா, போழா-பிளக்காத.

104. இயலுறும -வளரும். செறிவுறும - அடாததியாகும். பாலவகை-ஊழ் வகை. தொன்றுதொட்ட-பழமைபபட்ட.

105. ஈரிதாய் - ஈரமுடைய தாய். பகடுகள் - உழவு காளைகள். உவா - அமாவாசை நிகரவும - ஒப்பவும, தூறு - குறுங்காடு. பொருவவும - ஒப்பவும். பயிறல - பழகல.

106. குருததின் - குருத்திலின்று.

107. அறன்கடை - அறத்தின் இனமை.

108. அறததாறு - அறநெறி. அறனுக்கம் - அறப்பேறு. துபபுரவு - நுகர்ச்சி. செமபொருள் - கடவுள். பேராவியற்கை - வீடுபேறு.

110. முடங்கல என்னும் ஓலை - கடிதம்.

111. நித்திலத்தின் - முத்தாகிய.

112. பொர - மாறுபட. பொரு - முட்டிய. மறைக்

கொணடன்றே - மறைத் தறதுககொணடதோ வெ னின். மறைப்பதுவே - நிழல செயவதே.

நகுமொழிகள் - நகை மொழிகள. வழககு அறிய வலலாா - வழககை அறி விகக வலலாரை.

113. இடககரை - இடக குச செயவாரை வழஙகு தறகண - ஆளுததறகண.

114. வாயுறை வாழதது - வாழததுத லையுடைய சொன் மருநது. வயஙக - விளஙக. இனறி-இனறும படி. வழி நனி பயககும - பினபு இனிமை மிகப பயககும ஓமபடைக் கிளவி - பாதுகாபபுச சொற்களால வாய உறுத் தறறு - மெய்யாக அறி வுறுததுவது.

அவையடக்கியல-அவை யை அடககும சொலவி யலபு. அரில தப-குறறந தீர. வல்லா - வலலாதன. வகுததனர் - வகுதது; பகுததறிநது. வழி - வழி படுகிளவி. மொழிந தன்று - மொழிந்தது.

செவியுறை - செவி யறிவுறூஉ; செவியறி வுறுததி வாழத்துதல். செவி மருநது எனினு மாம. பொஙகுதல - மிகு தல, புரையோா - உயாந் தோா அவிதல - அடங்கு தல.

115 அஙகததக கிளவி - வசைககிளவி

இயலுரை - மெயயுரை; இனிததலும இடிததலு மினறி வாளா நடுநிலையா யுரைகரும் கருததுரை.

இனறு-தீது. துனன ருந துபபின-அணுகுதற் கரிய வலிமையினை யுடை ய வய மான் - வலிய குதி ரை அறவை - அறததை யுடையை.மறவை - வீரத தையுடையை. நிலை - வா சறகால. சிறை - பககம.

117. இயல் வழககு - இயற கை வழக்கு வணணககா- ரணய பரிசோதகா காணம - பொற்காசு.

118 எறித்தரு - எறித தலைச செயகின்ற. சுவல அசைஇ - தோளில வைத்து. மாலை - இயல்பு கொளை - கொள்கை. நடை - ஒழுக்கம.

செயற் பாலதோரும எனபதில ஓரும, அசை.

119. காட்சி - அறிவு. நெய தல-சாக்காடு. தொய்யா-

இன்ப நுகாவிற சோர் விலலாத. மாறிப பிறப் பின - மாறிப பிறக்கும பிறபபினகண இன்மை யும - நுகாச்சி யுணமை யும இனமையும. தவத் தலே - மிகச சிறநதது.

5 வழக்கம்

124. தெள்ளொளிப் பெரும பொருள் - கடவுள்; அண்ணிக்கும - தித்திக் கும.

125. முகிழத்து - தோன்றி.

127. துளககல-அசைத்தல. துணேமை - அளவினே.

ஏதுநடை-காரண இயை பு. மேவாஙகு-பொருநதிய வகையில.

129. அறிய - பலா உள்ள மும் அறிநது கவருமபடி.

130. மரபுநிலே - வழக்கு நிலே.

131 துறுகல - கரட்டு நிலம

132. முழுமகன் - அறிவி லான. கோலி -வகுதது - சுடர் காவல - சுடர் ஒளி விடுதல.

133. அழகில பகுதி - அழ கிலலாத பகுதி.

134. துகிர்-பவளம. காமரு- விருமபததக்க. தொடை புணர்நது - கோவை பொருந்தி. ஒருவழி - ஓரி டதது.

கவின-அழகு. இல்லது- நிகழாதது

136. பொன உரை கல் - பொன தேய்த்துத் தரம் உணருங கடடளேக கல.

137. வாழவாஙகு - வாழ் மியலபிறலை-உரூ உவிய - உருவிய.

139. கருகருவென - முதன் மையும இனறியமையா மையுமாக. பொயயும வழுவும - தீமையும தவ றும. கற்பால -மலேபபாங் கரிலிருநது. உமிழநத - உமிழபபடட; கழுவாது- மெருகுறுத்தாது. நற் பால - அதன நலவியல பாகிய ஒளி. அழியும-மங் கும.

140. அலகை - பேய்.

142. ஒழுககல - ஒழுகச் செயக. நீவல - தடவல.

143. அறிதுயில - உறஙகு வது போனறிருநதும அறிவுறறிருக்கும நிலே.

நன்னா - நலல.

தொலவியல மரீஇய - பழ மைத தனமையைப் பொருநதிய

6 ஒழுக்கம்

144. நோவு - இணேநதமை

தல். நெடுமை - தொடர்ந்து செலலுதல்.
நயப்பாடு - மென்மை.
145. அருநடை - அரிய நடை.
பாடு - உலக முறைமை
முறைச செலவு - நெட்டொழுக்கம; முறைமையே கருதியொழுகுதல
துபபுரவு - வசதிகள்; உணடி, மருந்து, உறையுள் முதலியன.
146. நயபபாடு - மெனமை.
நளினம - மென்மை.
147. இழுமென் மொழி - மெலலென்ற சொல.
உள்ளி நோன் முதல - பூணடின அடியைப போனற வலிய திரளை.
148. ஓலலையே - விரைய.
கெளவை - எளளிளங் காய்.
149. காவலா - அரசர்.
150. வாஙகிய - ஒழுக்கிய.
151. விழுததொடா-சிறநத தொடா.
படுபாக்கு-படுதலை. ஒல்கார் - தளரார்.
152 கொளை நடை -கொள்கையும நடையுமுடைய.
இவவிழுப்பம-உயர்வுஎன்னுமஇத தெய்வப் பெறறி.
பரிநதோம்பிக் காக்க - அழிவுபடாமற் பேணி வருந்தியுங காகக. தெரிந்தோமபித தேரினும - ஆராயநது மனத்தையொருககித தேர்நதாலும.
154. கழறவேணடுதலும - இடித்துரைகக வேணடுதலும
கலிமாப் புரவி - செருக்கிச் செலலும மாவினமாகிய குதிரை. வாதுவன - அதனைச் செலுததுவோன
155 செமமல-தலைமை
161. சேறல - செலலுதல
162. தறபிறா - தனகட்பிறா. நோ நொநது - துன்பததிறகு வருநதி.
169 மேஎய - பொருந்தி.
170. உவர்க்கு நிலை - தெவிட்டு நிலை.
பாஙகரும சிறப்பின்-தனககுத துணையிலலாத வீட்டினபம ஏதுவாக. நிலலாவுலகம புலலிய - நிலைபேறிலலாத உலகியற்கையைப பொருநதிய
கிழவனுங் கிழததியும - தலைவனுந தலைவியும. சிறந்தது - ஞானம்.
171. காடசி -மெய்யுணர்வு.
பொதுள - நிரமபிப் பொருந்த.
172. கேளவி நல்லுயிர் -

கேள்வி யளவேயான நலனுயிர். வரைந்து-வரையறை செய்து. முதுநீர் - கடல.

173. அடகு - இலை ஓவம-ஓவியம வரைப்பு-இங்கே, இல்லம. பாவை - கொல்லிப்பாவை. தொடி - வளைகள். மள்ளன - இளமையின்ப முடையோன.

174. கணடிகும - கண்டேம புலர்ததுவோன் - புலாததுவோனு யிருக்கின்றனன.

அருவி ஏற்றலின் - அருவி நீரை ஏறறலால். நிறம பெயர்நது - நிறம மாறி. திலலை-திலலந தளிர். புலலென - புற்கென்ற, புற்கெனனும பழுபபு நிற முடைய அள் இலைத் தாளி - செறிநத இலையையுடைய தாளியை, தாளிக்கீரையை. கொய்யுமோன-கொய்வோன். மயில என்றது, வாழகைத்துணையை

175. சானறு - நிரமபி. பேராவியறகை - வீடுபேறு.

176. சுவல-தோள். மாலை-இயலபு.

சூழல - இடம.

178. பாங்கினில் - முறைமையில

179 புரையுநர் - ஒப்போர்.

184. சீரை - மரவுரி. தைஇய - பொருததி அமைதத. இமைக்கும் - ஒளிவிடும. உடன்கழிநத-தொடர்பாகக் கழிநத. செறறம - நெடுங்காலப் பகைமை. அநதரக் கொட்பினர் - வானில இயஙகுவோராய். தா இல கொள்கை - வருத்தமில லாத அருட் கற்பு.

185. ஐயவி யனைத்தும் - வெண் சிறு கடுகளவும.

186. விழுபபத்தை - தெய்வத தன்மையை. எருமை-கலவினவடிவுக்குஉவமை. இடைதோறு - இடந தோறும. ஆனிற பரக்கும - ஆன நிரைபோல ஏராளமாய்ப் பரநது தோனறும. யானைய கானகம, முனபின் கானகம் என்க. முன்பு - வலிமை. நீக்கி ஒன்ரூது ஓம்புமதி எனக குழவி கொள்பவரின் - குழநதையை வளர்ப்பாரைப் போல. அளிது-அளிக்கத தக்கது. பெறலருங் குரைத்து -

பெறறகரியது. ஓ, தான, ஏ, குரை, அசை.

187. முயலகனநோய்- ஒரு வகை வலிபபு நோய்.

188. சீக்கும் - கலைககும ; கலைத்து அப்புறபபடுதது. மா - புலி முதலிய கொடிய விலங்குகளும மான் முதலியனவும

189. கலிங்கம - ஆடை. ஆலமர் செலவன் - சிவபிரான. சாவம - வில. மீக கூறல - புகழதல. தலைபபோகன்மையின் - முடிவு போகாமையால. சிறு வழி - சிறிய இடததில. ஆகியக் கணணும - ஆகிய விடததும, தம முழை - தம்மிடததே

190. தடவு - வேளவிக் குணடம உவரா ஈகை - வெறுப்பிலலாத ஈகையினல. துவரை - துவராபதி.

191. ஊறின்றி - தீதினறி. முடலை - முறுக்குணட. முளி எரி - கனன்ற தீ. பொத்தி- மூட்டி. பாயற பள்ளி- படுக்கையிடம.

193. புகா-உணவு. உறு- எயதாத.

194 அல்லற்காலை - துன் பக் காலம மருட்கை - வியக்குந் தன்மை. எனைப் பெரும-எவ்வளவு பெரிய. தோற்றம - விளககம. சானறோன் - பிசிராநதை யார. இசை மரபாக புகழ இனறியமைமயாத தனமையாக. கநதாக - பறறுககோடாக. வியபபு இறநதன்று - வியப்புக கைமிககது ; வியப்பு அளவின் மிககது என்றபடி.

துகிர் - பவளம. காமரு - விருமபததகக. சேயவாயினும - சேய் நிலத்தினவாயினும. தொடை புணாநது - கோவை பொருநதி. கலம - அணிகலம சானறோர பாலராப - சானறோர பக்கததவராவா.

196 இருபாற பெயரிய - இருகூற்ற பெயர் பெற்ற. உரு - உட்கு ; நனகுமதிபபு நீடுநிலை - நெடுஙகாலம நிலைபெறறிருநத. கேடும -அழிவும. கழாத்தலை - கழாத் தலையார்.

உனறு - உன் நாடு; பொன் றுடு - பொன் நாடு. எடுத் தருளிய - மேமபடுத தருளிய. நறு நிகழ்சசி - நல்ல நிகழ்சசி.

The B. N. Press, Madras.